யோகி ராம்சுரத் குமார் ஜயகுரு ஜயகுரு ஜயகுரு ராயா

# சடகோபரந்தாதி, பாசுர ராமாயண, பாகவத சுருக்கமும், தூத்துக்குடி நகர் வரலாறும்.

யோகி ராம்சுரத் குமார் ஜயகுரு ஜயகுரு ஜயகுரு ராயா

# திருவண்ணாமலை

இந்த ஊர் சைவ சமய குரவர்களால் புகழ்ந்து பாடப்பெற்றுள்ளது. அருணகிரிநாதர் முக்தி பெற்ற ஸ்தலம். மேலும் இடைக்காடர் எனும் சித்தர் சமாதியுற்ற இடம்.

தற்காலத்தில் சேஷாத்திரி ஸ்வாமிகள், ரமண மகரிஷி மற்றும் யோகிராம்சுரத்குமார் வாழ்ந்த இடமாகும்.

இந்த தலத்தின் பெயரை நினைத்தாலே முக்தி கிடைக்கும் என்று கூறுவார்கள்.

கோவிலில் இறைவன் பெயர்:-

1) அருணாசலேஸ்வரர்
2) அண்ணாமலையார்

இறைவி பெயர்:-

1) உண்ணாமுலையம்மாள்
2) அபீதகுஞ்சாம்பாள்

தல விருட்சம் :- மகிழமரம்

முக்கிய விழா :- கார்த்திகை மாத ஜோதி தரிசனம்.

# பொருளடக்கம்

## பால காண்டம்

திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ
நலமந்தமில்லதோர் நாட்டில்
அந்தமில் பேரின்பத்தடிய ரோடு
ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யான
அணியார் பொழில்சூழ் அரங்க நகரப்பன்
அலைநீர்க் கடலுள் அழுந்தும் நாவாய் போல்
ஆவாரார் துணையென்று துளங்கும்
நல்ல அமரர் துயர் தீர
வல்லரக்கர் இலங்கை பாழ்படுக்கஎண்ணி
மண்ணுலகத்தோ ருய்ய
அயோத்தி என்னும் அணி நகரத்து
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்க்
கௌசலைதன் குல மதலையாய்த்
தயரதன் தன் மகனாய்த் தோன்றிக்
குணம் திகழ் கொண்டலாய்
மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காக்கநடந்து
வந்தெதிர்ந்த தாடகை தன் உரத்தைக் கீறி
வல்லரக்கர் உயிருண்டு கல்லைப் பெண்ணாக்கிக்
காரார் திண்சிலை யிறுத்து,
மைதிலியை மணம் புணர்ந்து
இருபத் தொருகால் அரசு களை கட்ட
மழுவாளி வெவ்வெரி நற்சிலை வாங்கி வென்றிகொண்டு
அவன் தவத்தை முற்றும் செற்று
அம்பொனெடு மணிமாட அயோத்தி எய்தி

## அயோத்யா காண்டம்

அரியணை மேல் மன்னன் ஆவான் நிற்கக்
கொங்கைவன் கூனி சொற் கொண்ட
கொடிய கைகேயி வரம் வேண்ட

அக் கடிய சொற் கேட்டு
மலக்கியமா மணத்தனுய் மன்னவனுமருதொழியக்
குலக்குமாரா! காடுறையப் போ என்று விடை கொடுப்ப
இந்நலத்தை வேண்டாது
ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமும் ஆங்கொழிந்து
மைவாய களிறொழிந்து மாவொழிந்து தேரொழிந்து
கலனணியாதே காமரெழில் விழலுடுத்து
அங்கங்கள் அழகு மாறி
மானமரு மென்னேக்கி வைதேவி யின்துணையா
இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின்செல்லக்
கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானகம் கடந்து போய்ப்
பத்தியுடைக் குகன் கடத்தக் கங்கை தன்னைக் கடந்து
வனம் போய்ப் புக்குக் காயோடு நீடு கனியுண்டு
வியன் கானம ரத்தி நீழல்
கல்லணைமேல் கண் துயின்று
சித்திரகூடத் திருப்ப, தயரதன் தான்
"நின் மகன் மேல் பழிவிளைத்திட்டு
என்னையும் நீள்வானில் போக்க
என் பெற்ருய் கைகேசீ!
நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன்"
என்று வானேறத்
தேனமரும் பொழில்சாரல் சித்திரகூடத்து
ஆனை புரவி தேரொடு காலாள்
அணி கொண்ட சேனை சுமந்திரன்
வசிட்டருடன் பரத நம்பி பணியத்
தம்பிக்கு மரவடியை வான்பணயம் வைத்துக் குவலயத்
துங்கக் கரியும் பரியும் இராச்சியமும்
எங்கும் பரதற் கருளிவிடை கொடுத்துத்
திருவுடைய திசைக்கருமம் திருத்தப்போய்த்
தண்ட காரணியம் புகுந்து

## ஆரணிய காண்டம்

மறை முனிவர்க்கு
'அஞ்சேல்மின்!' என்று விடை கொடுத்து
வெங்கண் விறல் விராதனாக விற்குனித்து
வண்டமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கிப்
புலர்ந்தெழுந்த காமத்தால் சீதைக்கு நேராவன்
என்னப் பொன்னிறங் கொண்ட
சுடு சினத்த சூர்ப்பணகாவைக்
கொடி மூக்கும் காதி ரண்டும்
கூரார்ந்த வாளால் ஈரா விடுத்துக்
கரனோடு தூடணன் தன்னுயிரை வாங்க
அவள் கதறித் தலையில் அங்கை வைத்து
மலையிலங்கை யோடிப்புகக்
கொடுமையில் கடுவிசை அரக்கன்
அலைமலி வேற் கண்ணாளை அகல்விப்பான்
ஒருருவாய் மானை யமைத்துச் சிற்றெயிற்று
முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தனாய் வஞ்சித்து
இலைக் குரம்பில் தனி யிருப்பில்
கனி வாய்த் திருவினைப் பிரித்து
நீள் கடல்சூழ் இலங்கையில்
அரக்கர் குடிக்கு நஞ்சாகக் கொடுபோய்
வம்புலாங்கடிகாவில் சிறையாய் வைக்க
அயோத்தியர்கோன் மாயமான் மாயச் செற்று
அலைமலிவேற் கண்ணாளை அகன்று தளர்வெய்திச்
சடாயுவை வைகுந்தத்தேற்றிக்
கானகம் படி புலாவி யுலாவிக்
கணை யொன்றினால் கவந்தனை மடித்துச்
சவரி தந்த கனியுவந்து

## கிஷ்கிந்தா காண்டம்

வன மருவு கவியரசன் தன்னோடு காதல்கொண்டு
மரா மரமேழெய்து
உருத்தெழு வாலி மார்பில்

ஒரு கணை உருவ ஓட்டிக்
கருத்துடைத் தம்பிக்கு
இன்பக் கதிர் முடி அரசளித்து
வானரக் கோனுடனிருந்து வைதேகி தனைத்தேட
விடுத்த திசை கருமம் திருத்து
திறல் விளங்கு மாருதியும்
மாயோன் தூதுரைத்தல் செப்ப!

## ஸுந்தர காண்டம்

சீராரும் திறல் அநுமன் மாகடலைக் கடந்தேறி
மும்மதிள் நீள் இலங்கை புக்குக்கடிகாவில்
வாராருமுலை மடவாள் வைதேவி தனைக்கண்டு
நின்னடியேன் விண்ணப்பம் கேட்டருளாய்!
அயோத்தி தன்னில் ஓர்
இடவகையில் எல்லியம் போதினிருத்தல்
மல்லிகை மாமாலை கொண்டாங்கார்த்ததும்
கலக்கியமா மனத்தனளாய்க் கைகேயி வரம்வேண்ட
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மறுதொழியக்
'குலக்குமரா! காடுறையப்போ' என்று விடை கொடுப்ப
இலக்குமணன் தன்னோடங்கேகியதும்,
கங்கை தன்னில்,
கூரணிந்த வேல்வலவன் குகனோடு
சீரணிந்த தோழமை கொண்டதுவும்.
சித்திரகூடத் திருப்பப் பரத நம்பி பணிந்ததுவும்
சிறுகாக்கை முலைதீண்ட மூவுலகும் திரிந்தோடி
'வித்தகனே! ராமா ஓ! நின்னபயம்' என்ன
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும்
பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட
நின்னம்பின் வழிநின்று சிலைபிடித் தெம்பிரானேகப்
பின்னேயங்கு இலக்குமணன் பிரிந்ததுவும்
அயோத்தியர் கோனுரைத்த அடையாளம்
ஈதவன்கை மோதிரமே' என்று
அடையாளம் தெரிந்துரைக்க
மலர்குழலாள் சீதையும்.

வில்லிறுத்தான் மோதிரம் கண்டு,
'அநுமான் அடையாளம் ஒக்கும்' என்று
உச்சிமேல் வைத்துகக்கத்
திறல் விளங்கும் மாருதியும்
இலங்கையர்கோன் மாக்கடி காவை யிறுத்து,
காதல் மக்களும் சுற்றமும் கொன்று
கடி இலங்கை மலங்க எரித்து
அரக்கர்கோன் சினமழித்து மீண்டும், அன்பினுல்
அயோத்தியர்கோன் தவிர்புரையும் அடியிணை பணிய

## யுத்த காண்டம்

கான எண்கும் குரங்கும் முசுவும்
படையாக் கொடியோனிலங்கை புகலுற்று
அலையார் கடற்கரை வீற்றிருந்து
செல்வ விபீடணற்கு நல்லானுய்
விரிநீ ரிலங்கை யருளிச்
சரண்புக்க குரைகடலை அடலம்பால் மறுகஎய்து,
கொல்லை விலங்கு பணிசெய்ய
மலையாலணைகட்டி மறுகரையேறி
இலங்கை பொடி பொடி யாகச்
சிலைமலி செஞ்சரங்கள் செல வுய்த்துக்
கும்பனெடு நிகும்பனும்பட
இந்திரசித் தழியக் கும்பகர்ணன் பட
அரக்கராவி மாள, அரக்கர்
கூத்தர் போலக் குழமணி தூரமாட
இலங்கை மன்னன் முடி யொருபதும்
தோளிருபதும் போயுதிரச்
சிலைவளைத்துச் சரமழை பொழிந்து
கரந்துணிந்து வெற்றிகொண்ட செருக்களத்துக்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
எண்மர் பதினெருவர் ஈரறுவர் ஓரிவர்
மற்றுமுள்ள வானவர் மலர்மழை பொழிந்து
மணிமுடி பணிதர அடியிணை வணங்க

கோலத்திருமா மகளோடு
செல்வவீடணன் வானரக் கோனுடன்
இலகுமணி நெடுந்தேரேறி,
சீரணிந்த குகனோடுகூடி
அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி எய்தி
நன்னீராடிப்
பொங்கிளவாடை யரையில் சாத்தித்
திருச்செய்ய முடியும் ஆரமும் குழையும்
முதலா மேதகு பல்கலனணிந்து
சூட்டு நன் மாலைகளணிந்து
பரதனும் தம்பி சத்துருக்கனனும்
இலக்குமணனும் இரவு நண் பகலும் ஆட்செய்ய
வடிவிணை இல்லாச் சங்குதங்கு முன்கை நங்கை
மலர்க்குழலாள் சீதையும் தானும்
கோப்பிடைய சீரிய சிங்கா தனத்திருந்து ஏழுலகும்
தனிக்கோல் செல்ல வாழ்வித்தருளினார்.

---

# குலசேகரத்தாழ்வார் பாடல்

12 ஆழ்வார்களில் குலசேகரத்தாழ்வார் ஒருவர். இவர் சேர நாட்டு மன்னர் ஆகும். அவர் காலத்தில் சோழ, பாண்டிய நாடுகளை வென்று தமிழ்நாடு முழுவதும் ஆட்சி செய்து வந்தார். இவர் நாலாயிர திவ்விய பிரபந்தம் எனும் ஆழ்வார்களின் நூலில் 105 பாடல்கள் பெருமாளை புகழ்ந்து பாடியிருக்கிறார். கடைசி அத்தியாயமாக "அங்கணெடுமதிள்" என்ற தலைப்பில் உள்ள 11 பாடல்களில் முதல் 10 பாட்டுக்களில் ராமாயணக் கதையை அழகு தமிழால், இனிய வார்த்தைகளால் பாடி உள்ளார்.

ராமர் தில்லை என்னும் சிதம்பரத்தில் உள்ள கோவிந்தராஜ பெருமாள் ஆலயத்தில் தனக்கு காட்சி தந்து உய்விக்க வேண்டி இந்த அத்தியாயம் பாடப் பெற்றுள்ளது.

# நாலாயிரத் திவ்ய பிரபந்தம்

## இயற்றிய

# 12 ஆழ்வார்கள்

1) பொய்கையாழ்வார்
2) பூதத்தாழ்வார்
3) பேயாழ்வார்
4) திருமழிசையாழ்வார்
5) நம்மாழ்வார்
6) மதுரகவியாழ்வார்
7) குலசேகராழ்வார்
8) பெரியாழ்வார்
9) தொண்டரடிப்பொடியாழ்வார்
10) திருப்பாணாழ்வார்
11) திருமங்கையாழ்வார்
12) ஆண்டாள்

# அங்கணெடுமதிள். 10.

1. அங்கணெடுமதிள்புடைசூழயோத்தியென்னும் அணிநகரத்துலகனைத்தும்விளக்கும்சோதி
வெங்கதிரோன்குலத்துக்கோர் விளக்காய் தோன்றி விண்முழுதுமுயக்கொண்ட வீரன் தன்னைச்
செங்கணெடுங்கருமுகிலையிராமன்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
எங்கள்தனிமுதல்வனையெம்பெருமாள்தன்னை யென்றுகொலோ கண்குளிரக் காணுநாளே (95)

அம் கண் —அழகிய இடங்களை யுடையதும்
நெடு மதிள் —உயர்ந்த மதிட்சுவரினால்
புடை சூழ் —நாற்புறமும் சூழப்பெற்றதுமான
அயோத்தி என்னும் அயோத்தியை யென்றபேர்பெற்ற
அணி நகரத்து —உலகத்திற்கு அலங்காரமான பட்டணத்திலே,
உலகு அனைத்தும் —எல்லா உலகங்களுக்கும்
விளக்கும் சோதி —தெளிவை யளிக்கும பரஞ்சோதியான
வெம் கதிரோன் குலத்துக்கு —உஷ்ணகிரணங்களுள்ள சூர்யனின் வமசத்தைச் சாந்த
ஓர் விளக்காய் —ஒப்பற்ற மங்களதீபமாக
தோன்றி —அவதரித்து
விண் முழுது உம் —மேலுலகம் முழுமையும்
உ(ய்)யகொண்ட —உஜ்ஜிவிக்கும்படி செயல்கொண்ட
வீரன் தன்னை —மஹாவீரனும்,
செம் கண் —செந்தாமரைக் கண்களுடன்
நெடு கரு முகிலை —மிகக்கருத்த மேகம்போன்றவனும்
எங்கள் தனி முதல்வனை —எங்களுடைய குலகூடஸ்தனும்
எம்பெருமாள் தன்னை —எமது ஸ்வாமியுமான
இராமன் தன்னை —ஸ்ரீராமபிரானை
தில்லை நகர் —தில்லைநகரிலிருக்கும்
திரு சித்திரகூடம் தன்னுள் —திருச்சித்திரக்கூடமென்ற திவ்ய தேசத்திலே
கண் குளிர —எனது கண்கள் குளிர்ந்திருக்கும்படி
காணும் நாள் —நான் ஸேவிக்கும் நாள்
என்று கொல் —எந்நாளோ!

2. வந்தெதிர்ந்ததாடகைதன் னுரத்தைக்கீறி வருகுருதிபொழிதா வன்கணை யொன்றேவி
மந்திரம்கொள்மறைமுனிவன்வேள்விகாத்து வல்லரக்கருயிருண்டமைந்தன்காண் மின்
செந்தளிர்வாய்மலர்நகைசேர் செழுந்தண்சோலைத் தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
அந்தணர்களொரு மூவாயிரவரேத்த அணிமணியாசனத்திருந்த அம்மான்தானே. (96)

வந்து எதிர்ந்த —தன் காட்டில் புகுந்ததற்காக வந்து எதிர்த்தவளான
தாடகைதன் —தாடகை யென்ற அரக்கியின்
வரு குருதி பொழிதர —பொங்கிவரும் உதிரம் கொழித்தோடும்படி
உரத்தை கீறி —மார்பைப் பிளக்கும்
வல்கணை ஒன்று —வலிய அம்பு ஒன்றையே ப்ரயோகித்து
மறை முனிவன் —(பிறகு) ப்ரம்மர்ஷியான விச்வாமித்திரரின்
மந்த்ரம் கொள் வேள்வி —மந்த்ரங்களால் செய்யபெறும் சுத்த யாகத்தை
காத்து —காக்க முன் வந்து
வல் அரக்கர் —ஸுபாஹு முதலிய கொடிய ராக்ஷஸர்களின்
உயிர் உண்ட —உயிரைப் போக்கின
மைந்தன் —மிடுக்கான குமாரன்
செம தளிர் வாய் —சிவந்த துளிர்களின் இடையிலே
மலர் நகை சேர் —புஷ்பங்களின் விகாஸத்தைப் பெற்ற
செழு தண் சோலை—வளர்ந்து குளிர்ந்த பொழில்களை யுடைய
தில்லைநகர் திருச்சித்ரகூடம் தன்னுள்
ஒரு மூ ஆயிரவர் அந்தணர் —மூவாயிரம் பார்ப்பனர்கள்
ஏத்த —துதி செய்யும்படி
அணிமணி ஆசனத்து —அழகியரத்னமயமான (கோப்புடைய சீரிய) சிங்காசனத்திலே
இருந்த —வீற்றிருக்கும்
அம்மான்தானே —ஸ்வாமியே;
காண்மின் —ஸேவியுங்கள்.

3 செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்காகிச் சினவிடையோன் சிலையறுத்துமழுவாளேந்தி
வெவ்வரிநற்சிலைவாங்கி வென்றிகொண்டு வேல்வேந்தர் பகைதடிந்தவீரன் தன்னைத்
தெய்வரஞ்சு நெடும்புரிசை யுயர்ந்தபாங்கர்த் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
எவ்வரிவெஞ்சிலைத்தடக்கை இராமன் தன்னை இறைஞ்சுவாரிணையடியே யிறைஞ்சினேனே.(97)

செ வரி —சிவந்த ரேகைகள் (அமர்ந்த)
நல் கரு —அழகிய, கருத்த
நெடு கண் — நீண்ட கண்களையுடைய
சீதைக்கு ஆகி —சீதையினிடம் மீடுபட்டு
சினம் விடையோன்—கோபமிக்க விருடபத்தை யுடையருத்ரனின்
சிலை அறுத்து — வில்லைமுறித்து
மழு வாள் ஏந்தி —பரசாயுதம் தரித்தவனிடமிருந்து
வெவ் வரி நல் சிலை —உக்கிரமாம் நீண்டு அழகிய தநுஸ்ஸை
வாங்கி வென்றி கொண்டு— கையால் பிடுங்கி ஜயம் பெற்று
வேல் வேந்தர் —ஆயுததாரிகளான அரசரிடம்
பகை தடித்த —அவர் வைத்திருந்த விரோதத்தை அழித்த

வீரன் தன்னை —மகாவீரனை
தெய்வர் அஞ்ச —பகைவர் பயப்படும்படியான
நெடு புரிசை —உயர்ந்த மதிட்சுவர்களின்
உயர்ந்த பாங்கர் —உந்நதமான பக்கங்களையுடைய
தில்லைநகர்திருச்சித்ரகூடந்தன்னுள் (எழுந்தருளியிருக்கும்)
எவ்வரி —அம்பு தொடுப்பதற்குத் தக்க
வெம் சிலை —கொடிய கோதண்டத்தை
தட கை —அகன்ற திருக்கையில் கொண்ட
இராமன் தன்னை —ஸ்ரீராமனை
இறைஞ்சுவார் —தொழுகின்றவர்களின்
இணை அடி ஏ —இரு திருவடிகளையுமே
இறைஞ்சினேன் —தொழா நின்றேன்.

4. தொத்தலர்பூஞ் சுரிகுழல்கைகேசிசொல்லால்தொன்னகரம்துறந்து துறைக்கங்கைதன்னைப்
பத்தியுடைச் குகன் கடத்தவனம் போய்ப்புக்குப்பரதனுக்குப்பாதுசமும் அரசுமீந்து
சித்திரகூடத்திருந்தான் தன்னையின்று தில்லைநகர்திருச்சித்ரகூடந்தன்னுள்
எத்தலையும் கண்குளிரக்காணப்பெற்ற இருநிலத்தார்க்கிமையவர்நேரொவ்வார்தாமே. (98)

தொத்து அவர் பூ — கொத்தாக மலரும் புஷ்பமணிந்த
சுரி குழல் — சுருண்ட கூந்தலை யுடைய
கைகேசி சொல்லால் — கைகேயியின் சொல்லுக்கிணங்கி
தொல் நகரம் — பரம்பராக்கிரமத்தில் கிடைத்த ராஜதானியை
துறந்து — அரசுடன் விட்டுவிட்டு
துறை கங்கை தன்னை — கங்கை யென்ற நதியை
பத்தி உடை குகன் கடத்த — பக்தனான குகனென்ற வேடர் கோன் ஓடத்தைக்கொண்டு தாண்டுவித்ததால்
வனம் போய் — காட்டிற்குச் சென்று
சித்திரகூடத்துபுக்கு — சித்ரக்கூடமலையிற் புகுந்து
பாதுகம் உம் — தன் பாதுகைகளையும்
அரசு உம் — ராஜ்யத்தையும்
பரதனுக்கு ஈந்து — பரதனிடம் வைத்துவிட்டு
இருந்தான் தன்னை — அயோத்திக்கு திரும்பாமே யிருந்த இராமபிரானை
இன்று — இப்பொழுது
தில்லைநகர்திருச்சித்ரகூடம்தன்னுள்
கண் குளிர — கண்கள் குளிர்ந்து விளங்கும்படி
எ தனை உம் காணப்பெற்ற — சிறிதளவாவது கண்டவர்களான
இரு நிலத்தார்க்கு — பெருப் பூமியிலிருப்பவர்களுக்கும்
இமையவர்தாமே — எப்போதும் கண்டு வரும் நித்யஸூரிகளும்
நேர் ஒவ்வார் — ஒப்புமை பொருந்தமாட்டார்.

5. வலிவணக்குவரைநெடுந்தோள் விராதைக்கொன்றுவண் தமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கிக்
கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக்கரனேடுதூடணன் தன்னுயிரைவாங்கிச்
சிலைவணக்கிமான்மறியஎய்தான் தன்னைத்தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
தலைவணக்கிக்கைகூப்பி ஏத்தவல்லார்திரிதலால்தவமுடைத்துத்தரணிதானே. (99)

வலி —விரோதிகளின் வலிமையை
வணக்கு —கீழ்ப்படுத்துவனவும்
வரை நெடு —மலை போல் உயர்ந்தனவுமான
தோள் —தோள்களை யுடைய
விராதை கொன்று -விராதனென்ற அரக்கனையழித்தும்,
வண் தமிழ் மா முனிகொடுத்த —விலக்ஷணரும் தமிழிலக்கணமியற்றியவருமான அகத்திமாமுனிவர் மைர்ப்பித்த
வரி வில் —திடமான வைஷ்ணவவில்லை
வாங்கி —பெற்றுக்கொண்டு
கலை வணக்கும் — மானை அவமதிக்கும்
நோக்கு —கண்களை யுடையளாய் வந்த
அரக்கி —சூர்பணகை யென்ற ராக்ஷஸியின்
மூக்கை நீக்கி —மூக்கையறுக்கச்செய்தும்,

கரனேடு தூடணன் தன் — கரதூஷணாதிகளுடைய
உயிரை வாங்கி —ப்ராணனை யழித்தும் (பிறகு)
மான் மறிய —பொன்மானாக வந்த மாரீசன் மாளும்படி



சிலை வணங்கி எய்தான் தன்னை —வில்லை வளைத்து அம்பை ஏவின இராமபிரானை
தில்லைநகர் திருச்சித்ரகூடம்தன்னுள்
தலை வணக்கி —தங்கள் தலையை குனியச்செய்து
கை கூப்பி ஏத்த வல்லார் —அஞ்ஜலி செய்து துதிக்க வல்லமை பொருந்திய பெரியோர்
திரிதலால் —ஸஞ்சாரம் செய்வதால்
தரணி தான் தவமுடைத்து —பூமண்டலம் முழுதும் பாக்கியமுள்ளதாம்

6. தனமருவு வைதேகி பிரியலுற்றுத்தளர்வெய்திச்சடாயுவை வைகுந்தத்தேற்றி
வனமருவுகவியரசன் காதல்கொண்டு வாலியைக்கொன்றிலங்கை நகரரக்கர்கோமான்
சினமடங்கமாருதியால்சுடுவித்தானைத்தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
இனிதமர்ந்தவம்மானை இராமன்தன்னை ஏத்துவாரிணையடியே ஏத்தினேனே. (100)

தனம் மருவு —ஸ்தனங்களால் விளங்கின(அல்லது) செல்வமாகச் சேர்ந்திருந்த
வைதேகி —சீதைப்பிராட்டியின்
பிரியல் உற்று —பிரிதலைப் பெற்று
தளர்வு எய்தி —மிகவும் மெலிதலுற்று (அந்நிலைமையில்)
சடாயுவை —உபகாரம் செய்து உயிரிழந்த ஜடாயுவை
வைகுந்தத்து ஏற்றி —தனது அனுக்ரஹத்தாலே பரமபதம் பெறுவித்து
வன மருவு —ருச்யமூகக்காட்டிற் கிடந்த
கவி அரசன் —வாநரராஜனாகும் ஸுக்ரீவனின்
காதல்கொண்டு —ஸ்நேகத்தை, மித்ரபாவத்தைப் பெற்று
வாலியை கொன்று —பாவியான வாலியைமாளவைத்து
இலங்கை நகர் —லங்காபட்டணத்தை
அரக்கர்கோமான் —ராக்ஷஸேச்வரனை ராவணனின்
சினம் அடங்க —கோபாக்னி தணியும்படி
மாருதியால் சுடுவித்தானை —ஹநுமாரைக்கொண்டு அவர்வாலில் வைத்த அக்கினியால் எரித்தவனும்,
தில்லைநகர்த்திருச்சித்ரகூடம்தன்னுள்
இனிது அமர்ந்த அம்மானை —வடசித்திரகூடத்திற்கு மேலாகப் பிரீதியுடன் மன்னியிருக்கும் ஸ்வாமியுமான
இராமன்தன்னை
ஏத்துவார் இணை அடி ஏ —துதிப்பவரின் திருவடிகளையே
ஏத்தினேன் —யான் ஏத்துவது.

7. குரைகடலையடலம்பால் மறுகவெய்து குலைகட்டி மறுகரையை யதனலேறி
எரிநெடுவேலரக்கரோடும் இலங்கைவேந்தன் இன்னுயிர்கொண்டு அவன் தம்பிக்கரசுமீந்து
திருமகளோடினிதமர்ந்த செல்வன் தன்னைத் தில்லைநகர்திருச்சித்ரகூடந்தன்னுள்
அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால் அரசாக எண்ணேன் மற்றரசு தானே. (7/1)



குரை கடலை —கோஷித்திருந்த ஸாகரத்தை
அடல் அம்பால் —கொல்லுதல் கொண்டகணையால்
மறுக எய்து —கலங்கும்படி பீடித்து
குலை கட்டி — செய்கரையிட்டு
அதனல் —அந்த அணைவழியாக
மறு கரை ஏறி —கடலின் தென்கரையைச்சேர்ந்து
எரி நெடு வேல் —எதிரிகளை எரிக்கும் நீண்ட வேலாயுதங்களையுடைய
அரக்கரொடும் —ராக்ஷஸர்களையும் சேர்த்து
இலங்கைவேந்தன் —லங்கேச்வரனை ராவணனின்
இன் உயிர் கொண்டு—இனிய ப்ராணனை அபஹரித்து
அவன் தம்பிக்கு —ராவணன் தம்பியான விபீஷணனுக்கு

அரசு உம் ஈந்து —ராக்ஷஸ ராஜ்யமளிப்பதையும் செய்து
திருமகளோடு இனிது அமர்ந்த —ஸீதைபிராட்டியோடு ஸந்தோஷமாகச் சேர்ந்திருப்பவனும்
தில்லைநகர்திருச்சித்திரகூடந்தன்னுள்
அரசு அமர்ந்தான் —ஆள்கையைப் பற்றி விளங்கு...
செல்வன் தன் —திருமாலின்
அடி சூடும் அரசை அல்லால் —திருவடிகளை சிரஸா வஹிப்பதாம் ராஜ்யமன்றி
மற்று அரசு —வேறு ராஜ்யத்தை
அரசு ஆக எண்ணேன் —(அரசு புரிவதாக) ராஜ்யமாக எண்ணமாட்டேன்

8. அம்பொனெடுமணிமாடவயோத்தியெய்தி யரசெய்தி அகத்தியன் வாய்த்தான் முன்கொன்ருன்
தன்பெருந்தொல்கதைகேட்டு மிதிலைச்செல்வி உலகுய்யத் திருவயிறுவாய்த்த மக்கள்
செம்பவளத்திரள்வாய்த் தன்சரிதை கேட்டான் தில்லைநகர்திருச்சித்திரகூடந்தன்னுள்
எம்பெருமான்தன்சரிதை செவியால் கண்ணுல் பருகுவோமின்னமுதம் மதியோமொன்றே.
(102)

அம் பொன் —அழகிய பொன்ஞலான
கெடு மணி மாட —உயர்ந்த மணிமயமாளிகைகளை யுடைய
அயோத்தி எய்தி —திருவயோத்தியைக்கு எழுந்தருளி
அரசு எய்தி —இராஜ்யத்தைப் பெற்று
அகத்தியன்வாய் —(தான் சிங்காசத்திலெழுந்தருளி யிருந்தபோது காணவந்த) அகத்தியமுனிவர் மூலமாக
தான் முன் கொன்ருன் தன் —அதற்கு முன் தன்னுல் கொல்லப் பட்ட ராவணனுடைய
பெரு தொல் கதை—பிறப்பு, தவம்புரிந்தது, உலகங் களைப் பீடித்தது முதலான பழைய கதைகளை
கேட்டு —செவியுற்றுணர்ந்து
(பிறகு காலக்ரமத்திலே)
உலகு உய்ய —உலகம் உஜ்ஜீவிக்கும்படி
மிதிலை செல்வி —மிதிலையிற் தோன்றிய பிராட்டி யான ஸீதையின்
திருவயிறு வாய்த்த—திருவயிற்றில் பிறவியுற்ற
மக்கள் —தன் பிள்ளைகளான குசலவர்களின்
செம் பவளம் திரள் வாய் —சிவந்த பவளத்தின் தொகுதி போன்ற வாயினுல்
தன் சரிதம் —தனது சரித்திரமான ஸ்ரீமத்ராமா யணத்தை
கேட்டான் —செவியுற்றருளின,
தில்லைநகர்திருச்சித்ரகூடம் தன்னுள்
(எழுந்தருளியிருக்கும்)
எம்பெருமான் தன்—எங்கள் ஸ்வாமியான இராம பிரானுடைய
சரிதை —சரித்ரமாகிய ஆராவமுதை
செவியால் கண்ணுல் —காதினுலும் கண்ணினுலும் (காதாகிய கண்ணினுல்)
பருகுவோம் —அருந்தும் நாம்
இன் அமுதம் —இனிய தேவாம்ருதத்தைக்கூட
ஒன்று மதியோம் —ஒரு போக்யமாக நினையோம்.

9. செறிதவச்சம்புகன்தன்னைச்சென்றுகொன்று செழுமறையோனுயிர் மீட்டுத்தவத்தோனீந்த
நிறைப்மணிப்பூணணியும்கொண்டிலவணன்தன்னைத்தம்பியால் வானேற்றி முனிவன் வேண்டத்
திறல்விளங்குமிலக்குமனைபிரிந்தான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
உறைவானைமறவாத உள்ளம்தன்னையுடையோம் மற்றுறுதுயரமடையோமன்றே. (103)

செறி தவம் —மிகுந்த தவம் புரிந்து கொண்டிருந்த
சம்புகன் தன்னை —சம்புகனென்ற சூத்ரனை
சென்று கொன்று —தென்திசையில் சைலமலையின் வடபார்ச்வத்துப் பொய்கைக்குச் சென்று தலையறுத்து,
செழு மறையோன் —சிறப்பாக வேதமோதக்கூடும் அந்தணச்சிறுவனை
உயிர் மீட்டு — மீண்டு முயிர் பெற்றவனாக்கி,
தவத்தோன் ஈந்த —தபஸ்வியான அகத்தியர் ப்ரீதியினால் ஆச்ரமத்திலளித்ததும்
நிறை —அநேக வஸ்துக்களைக் கொடுக்கும் சக்தி நிறைந்ததும்
மணி பூண் — மணிமயமாயும்பூணத்தக்கதுமான
அணி கொண்டு —ஆபரணத்தைப் பெற்று
இலவணன் தன்னை —யமுனையருகில் இருந்த லவணாஸுரனை
தம்பியால் —சத்துருக்கனைக் கொண்டு
வான் ஏற்றி —வீரஸ்வர்க்கம் புகுவித்து
முனிவன் வேண்ட —துர்வாச முனிவன் நிர்பந்தித்து அபேக்ஷித்தாலே
திறல் விளங்கும் —எல்லோரும் விளங்கும்படி தன் அபாயத்திற்குத் துணிவுகொண்ட
இலக்குமனை —லக்ஷ்மணனையும்
பிரிந்தான்தன்னை —ப்ரிதிஜ்ஞைப்படிப் பிரிந்து விட்டவனும்
தில்லைநகர்திருச்சித்ரகூடம்தன்னுள்
உறைவானை — நித்யவாஸம் செய்தருளுமவனும் மான இராமனை
மறவாத உள்ளம் தன்னை —என்றும் மறக்காத மனத்தை
உடையோம் —உடைய நாம்
உறு துயரம் — (நலிவபற்கு) நெருங்கும் துக்கங்களை
மற்று அடையோம் —இனி அடையமாட்டோம்
அன்றே — அன்றோ? ஸந்தேகமில்லை.

10. அன்றுசராசரங்களை வைகுந்தத்தேற்றி அடலரவப்பகையேறி அசுரர்தம்மை
வென்றிலங்குமணிநெடுந்தோள் நான்கும்தோன்றவிண் முழுதுமெதிர்வரத்தன் தாமம்மேவி
சென்றினிது வீற்றிருந்த அம்மான் தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
என்றும் நின்றானவனிவனென்றேத்தி நாளும் இறைஞ்சுமினோ எப்பொழுதும் தொண்டீர் நீரே (104)

தொண்டீர்! நீர் —பகவத் பக்தர்களே! நீங்கள்
அன்று —தான் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினபோது
சர அசரங்களை —அயோத்தியிலுள்ள ஜங்கம ஸ்தாவரங்களனைவற்றையும்
வைகுந்தத்து —ஸந்தாநலோகத்திற்கு
ஏற்றி —ஏறச் செய்து
அடல் —வலிமை பொருந்திய
அரவம் பகை —ஸர்ப்பசத்துருவான கருடனை
ஏறி —வாஹனமாக்கிக்கொண்டு
அசுரர் தம்மை வென்று —அசுரர்களை ஜயித்து
இலங்கும் அணி, நெடு —ப்ரகாசிக்கின்ற (இராமவதாரத்தி லில்லாத அழகிய உயர்ந்த
தோள் நான்குடம் நாலு தோள்களும்
தோன்ற —விளங்காநிற்க
விண் முழுதும் எதிர்வர —மேலுகிலுள்ளார் எல்லோரும் எதிர்கொண்டுவர
தன் தாமம் மேவி சென்று —தனது ஸ்தானத்தை விரும்பி எழுந்தருளி
இனிது வீற்றுருந்த —அங்கு இன்பத்துடன் எழுந்தருளியிருக்கும்
அம்மான் தன்னை —ஸ்வாமியை
தில்லைநகர்திருச்சித்ரகூடம்தன்னுள்
என்றும் நின்றான் —எப்பொழுதும் நின்றருளும்
இவன் —இந்த எம்பெருமான்
அவன் —அந்த இராமபிரானே
என்று நாளும் எப்பொழுதும் —என்ற வாறு ப்ரதிதினமும் ஒவ்வொரு வேளையிலும்
ஏத்தி —துதித்து
இறைஞ்சுமின் —வணங்குங்கோன்.

11. தில்லைநகர் திருச்சித்ரகூடந்தன்னுள் திறல்விளங்குமாருதியோடமர்ந்தான் தன்னை
எல்லையில்சீர்த் தயரதன் தன்மகனாய்த் தோன்றிற்றதுமுதலாத் தன்னுலகம் புக்கதீருக்
கொல்லியலும் படைத் தானைக் கொற்றவொள்வாள் கோழியர்கோன் குடைக்
குலசேகரன் சொற்செய்த
நல்லியலின் தமிழ்மாலை பத்தும்வல்லார் நலம்திகழ் நாரணனடிகீழ் நண்ணுவாரே. (105)

கொல் இயலும் —கொல்லுதலில் ஈடுபட்ட
படை தானை —ஆயுதங்கள் கொண்ட சேனையை
யுடையவரும்
கொற்றம் ஒள் வாள்—வெற்றியைப் பெறும் ஒளியுள்ள
(கத்தி) வாளையுடையரும்
கோழியர்கோன் — உறையூரார்க்குத் தலைவருமான
குடை குலசேகரன் —குடையின் கீழ் அரசராய் விளங்
கும் குலசேகரப் பெருமாளால்

தில்லைநகர் திருச்சித்ரகூடம்தன்னுள்

திறல் விளங்கு —பராக்கிரமத்தினல் விளங்காநிற்கும்
மாருதியோடு —வாயுபுத்ரனை ஹநுமானுடன்
அமர்ந்தான் தன்னை—வீற்றிருக்கும் இராமபிரானைப்
பற்றி
எல்லை இல் சீர் —அளவில்லாத குணங்களையுடைய
தயரதன் தன் —தசரத சக்ரவத்திக்கு
மகனாய் தோன்றிற்று -திருமகனாய் அவதரித்தது
அதுமுதல் ஆ முதலாக

தன் உலகம் புக்கது—தனது உலகமான விஷ்ணுலோகம்
ஈறு ஆ புகுந்தது அளவாக (முழுராமா
யணத்தையுமாக)

சொல் செய்த —சொல்லப்பட்ட
நல் இயல் —சிறந்த இலக்கணம் பொருந்திய
இன் தமிழ் —இனிய தமிழாலான
மாலை பத்து உம் — பத்துப் பாட்டுக்களையும்
வல்லார் —கற்றவர்
நலம் திகழ் —ஆனந்தாதி கல்யாணகுணங்
களால் விளங்கும்
நாரணன் —நாராயணனுடைய
அடி கீழ் —திருவடிகளில்
நண்ணுவார் —கிட்டியிருப்பார்.

ஸ்ரீ

# ஆழ்வார் நூற்றந்தாதி

என்கிற

# சடகோபரந்தாதி.

## நூல் எழுந்த வரலாறு.

சடகோபரந்தாதி என்ற நூலை இயற்றியவர் கம்பர், இவர் இராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றக்கருதி அங்குச் சென்று ஸ்ரீவைஷ்ணவசமயாசாரியரான ஸ்ரீமந்நாதமுனிகள் அனுமதிப்படி ஒருமண்டப கையங்கரியஞ்செய்து முடித்துச் சுப தினத்திலே அரங்கேற்றத் தொடங்குகையில், நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதன் அர்ச்சகமுகமாக ஆவிர்ப்பவித்து 'நீ நம்சடகோபனைப் பாடினையோ? பாடினுல்தான் நாம் உனது ஈாமாயணத்தைத் திருவுளம்பற்றுவோம்; இல்லாவிடின் அது நமக்கு அங்கீகாரமாகாது' என்று அருளிச்செய்ய, அங்ஙனமே கம்பர் நூறு கட்டளைக் கலித்துறையிற் சடகோபரந்தாதியைப் பாடினர். பின்பு, இராமாயணம், நாதமுனிகள் திருவோலக்கத்திலே மேட்டழகிய சிங்கர் சிரக்கம்பஞ் செய்யுமாறு அரங்கேற்றப்பட்டது. அக்காலம் முதலியவற்றை

''எண்ணிய * சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் [வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னுனே''

எனக் காண்க.

சகாத்தம் - சாலிவாகநசகாப்தம்: இப்பொழுது நடப்பது 1889; ஆகவே கம்பர்காலம் இப்பொழுதைக்கு ஆயிர வருஷங்களுக்கு முன்பு என்பர். குலோத்துங்கசோழன் காலம் எனப்படுதலால், கி. பி. 12-ஆம் நூற்றுண்டு என்பாருமுளர்.

'சடகோபர்' என்பது - ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்த மெய்யடியார்ளென்று கொண்டாடப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவரில் ஐந்தாமவரான நம்மாழ்வாரது திருநாமங்களிலொன்று. பாண்டியநாட்டில் தாமிரபர்ணி நதிதீரத்தி லுள்ளதான திருக்குருகூரில் வேள்ளாள் வருண்த்தவராகிய திருவழுதிவளநாடரென்பவரது சந்ததியிலே காரியென்பருக்கு உடையநங்கையார் திருவயிற்றில் திருவவதரித்த இவர், பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய குழந்தைச்செய்கையொன்றையுங் கொள்ளாமலே வாட்டமின்றிப் பரிபூர்ணராய் வளர்ந்து வருகிற ஆச்சரியத்தைத் தாய்தந்தையர் கண்டு இவரை அத்திருப்பதியிலுள்ள திருமாலின் திருக்கோயிலிற் கொண்டுபோய் விட, இவர் அங்குஇருந்த ஒருபுளியமரத்தின்கீழ்ச்சென்று வீற்றிருந்து பதினாறு பிராயமளவும் கண்திறவாமல் மௌனமாக எழுந்தருளியிருந்த பின்பு, மதுரகவிகள் இவ்வாழ்வாருடைய மகிமையையறிந்து வந்து அடைந்து அடிமைத்தொழில் செய்து வருகையில், ஆழ்வார் இருக்கு யசுர் யதர்வணம் சாமம் என்ற நான்குவேதங்களின் சாரார்த்தங்கள் முறையே அமையத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழியென்னும் நான்குபிரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை உய்வித்தன ரென்று வரலாற்றின் சுருக்கம் அறிக. கர்ப்பத்திலிருக்கிறபொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தஉடனேதனதுஸ்பரிசத்தால் அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்தபொழுது இவரையும் தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்துஓட்டியொழித்தனல். சடகோபர் என்று இவர்க்குத் திருநாமமாயிற்று. எம்பெருமானுடைய திவ்வியமங்கள குணகணங்களாகிய அமுத வெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவராதல்பற்றி 'ஆழ்வார்கள்' என்று பெயர்பெற்ற பரம பாகவதர்களில் இவர் பிரதானராதலால், 'ஆழ்வார்' என்பது இவர்க்குச் சிறப்புப்பெயராக வழங்கும். மாறன், பராங்குசன், வகுளாபரணன், திருநாவீறுடையபிரான், திருக்குருகூர்நம்பி, குருகைப்பிரான் முதலிய திருநாமங்களும் இவர்க்கு உண்டு.

## சிறப்புப்பாயிரம்.

1. தேவிற்சிறந்த திருமாற்குத்தக்கதெய்வக்கவிஞன்
பாவிற்சிறந்த திருவாய்மொழிபகர்பண்டிதனே
நாவிற்சிறந்தவமாறற்குத்தக்கநன்னாவலவன்
பூவிற்சிறந்தவாழ்வான்கம்பநாட்டுப்புலமையனே.

(இதன்பொருள்.) தேவில் - (பிரமன் ருத்திரன் இந்திரன் முதலிய) தேவர்களனைவருள்ளும், சிறந்த - மேம்பட்டவனான திருமாற்கு - ஸ்ரீமந்நாராயணனுக்கு, தக்க - தகுந்த, தெய்வம் கவிஞன் - தெய்வத்தன்மையுள்ள கவிபாடவல்ல புலவன், பாவில் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே - எல்லாப் பாடல்களிலும் மேம்பட்ட திருவாய்மொழியென்னுந் திவ்வியப் பிரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளிய ஞானப்பண்டிதரான நம்ஆழ்வாரேயல்லது வேறில்லை; (அவ்வாறே), நாவின்சிறந்த அமாறற்கு தக்க நல்நாவலவன் - (அங்ஙனம்பாடவல்ல) நாவினாற்சிறந்த அச்சடகோபர்க்குத் தக்க கவிபாடவல்ல சிறந்த புலவன், பூவில் சிறந்த ஆழ்வான் கம்பநாட்டுப் புலமையனே - இந்நிலவுலகத்திற் சிறந்த கம்பநாட்டாழ்வாரென்னும் வித்துவானேயல்லது வேறில்லை; (என்றவாறு )

2. ஆரணத்தின்சிரமீதுறைசோதியையந்தமிழாற்
பாரணஞ்செய்தவனைக்குருகூரனைப்பற்பலவா
நாரணனுமெனவேத்தித்தொழக்கவிநல்கு
கொடைக்
காரணனைக்கம்பனைநினைவாமுட்களிப்புறவே.

(இ - ள்.) ஆரணத்தின் சிரம்மீது — வேதமுடிவிலே, உறை — பொருந்திய, சோதியை — பரஞ்சோதிஸ்வரூபியான ஸ்ரீமந்நாராயணனை, அம் தமிழால் - அழகிய தமிழ்ப்பாசுரங்களினால், பாரணம் செய்தவனை - பாடியனுபவித்தவரான, குருகூரனை - திருக்குருகூரில் அவதரித்தவராகிய நம்மாழ்வாரை, பல் பல ஆ - பலப்பல வகையாக, நாரணன் ஆம் என ஏத்தி தொழ — அந்த நாராயணமூர்த்தியே யாவரென்று துதித்து (அனைவரும்) வணங்கும்படி, கவி நல்கு - கவிபாடிய கொடை கார் அணனை - அருட்கொடையினால் மேகத்தைப்போல்பவராகிய, கம்பனை - கம்பநாட்டாழ்வாரை, உள் களிப்பு உற —

மனத்தில் ஆனந்தம் உண்டாகி மிகுமாறு, நினைவாம் - (எப்பொழுதும்) சிந்திக்கடவோம், (யாம்);

3. நஞ்சடகோபனைப்பாடினையோவென்று நம்பெருமாள்
விஞ்சியவாதரத்தாற்கேட்பக்கம்பன் விரைந் துரைத்த
செஞ்சொலந்தாதிகலித்துறைநூறுந்தெரியும் வண்ண
நெஞ்சடியேற்கருள்வேதந்தமிழ்செய்த நின்மலனே.

(இ-ள்.) வேதம் தமிழ் செய்த நின்மலனே - வேதங்களைத் தமிழ்த்திவ்வியப்பிரபந்தங்களாக அருளிச்செய்த குற்றமற்ற ஸ்வாமி!—நம்சடகோபனை பாடினையோ என்று – 'நம்ஆழ்வாரைத் துதித்துப் பிரபந்தம் பாடினையோ?'' என்று, நம் பெருமாள் விஞ்சிய ஆதாரத்தால் கேட்ப - ஸ்ரீரங்கநாதன் மிக்க அன்பு கொண்டு வினவியருள, (அதனை யநுசரித்து) கம்பன் விரைந்து உரைத்த - கம்பர் விரைவாகப் பாடின, செம் சொல் அந்தாதி கலித்துறை நூறும் - செந்தமிழ்ச் சொற்களாலான அந்தாதிப் பிரபந்தத்திலுள்ள நூறுகட்டளைக் கலித்துறைகளையும், தெரியும் வண்ணம் – அறிந்து கொள்ளும்படி, அடியேற்கு நெஞ்சு அருள் - தாசனான எனக்கு மனப்பரிபாகத்தை அளித்தருள்வாயாக; (எ – று)

4. நாதனரங்கனயந்துரையென்னநற்கம்பனுன்றன்
பாதம்பரவியபைந்தமிழ்நூறும்பரிவுடனே
யோதும்படியெனக்குள்ளந்தனையருளோதரிய
வேதந்தமிழ்செய்தமெய்ப்பொருளேயிதென் விண்ணப்பமே.

(இ-ள்.) ஓது அரிய - ஓதியுணர்தற்கு அரியனவான, வேதம் - வேதங்களின் ஸாரார்த்தங்களை தமிழ்செய்த - தமிழ்த் திவ்வியப்பிரபந்தங்களாக அருளிச்செய்த, மெய்ப்பொருளே - உண்மையான பரம்பொருளே!—நாதன் அரங்கன் – ஸ்ரீரங்கநாதன், நயந்து – விரும்பி, உரை என்ன – '(நம்சடகோபனைப்) பாடு' என்று நியமித்தருள, நல் கம்பன் - சிறந்த கம்பநாட்டாழ்வார், உன்தன் பாதம் பரவிய – உன்னுடையதிருவடிகளைத்

துதித்த, பைந் தமிழ் நூறும் - பசுந்தமிழ்ச்சொற்களால் தொடுத்த நூறுபாசுரங்களையும், பரிவுடனே ஓதும்படி - அன் போடு கற்றுஉணரும்படி எனக்கு உள்ளந்தனை அருள் - அடி யேனுக்கு மனப்பரிபாகத்தை அளித்தருள்வாய்: இது என் விண்ணப்பமே – இதுவே (உன்பக்கல்) அடியேன் செய்யும் விஜ் ஞாபநம்; (எ – று )

# சடகோபரந்தாதி.

## நூல்.

1. வேதத்தின் முன்செல்கமெய்யுணர்ந்தோர்
விரிஞ்சன்முதலோர்
கோதற்றஞானக்கொழுந்தின் முன்செல்ககுணங்
கடந்த
போதக்கடலெங்கடென்குருகூர்ப்புனிதன்
கவியோர்
பாதத்தின் முன் செல்லுமேதொல்லைமூலப்பரஞ்
சுடரே.

(இ - ள் ) தொல்லை - பழமையானதாயும், மூலம் – (எல்லாவற்றிற்கும்)மூலகாரணமாயும், பரம்-(எல்லாவற்றிற்கும்) மேலானதாயுமுள்ள, சுடர் - ஜ்யோதிஸ்வருமாய் விளங்குகிற ஸ்ரீமந்நாராயணன்,—வேதத்தின் முன் செல்க - வேதங்களைக் கடந்து சென்றாலுஞ் செல்லட்டும்: மெய் உணர்ந்தோர் - தத்து வங்களையாராய்ந்து அறிபவர்களான முனிவர்களும், விரிஞ்சன் முதலோர் - பிரமன்முதலான தேவர்களுமாகிய அனைவருடைய, கோது அற்றஞானம் கொழுந்தின் முன் - குற்றமற்ற ஞானத்தின் முடிவைக் கடந்து, செல்க – சென்றாலுஞ்செல்லட்டும்; குணம் கடந்த போதம் கடல் – எண்ணளவுகடந்த ஞானம் நிறைந்த கடலாகிய எங்கள் தென் குருகூர் புனிதன் – அழகிய திருக் குருகூரில் அவதரித்த பரிசுத்தமூர்த்தியான நம்ஆழ்வார் அருளிச் செய்த, கவி - பாசுரத்தினது, ஓர் பாதத்தின் முன் - ஓர் அடியைக் கடந்து செல்லுமே - செல்லமாட்டுவனோ! [செல்ல மாட்டான் என்றபடி]; (எ – று.)

கோயில்களில் உத்ஸவங்கண்டருளுகிறபொழுது எம்பெருமான் நடுவேஎழுந்தருள, வடமொழிவேதம் அவனை எட்டமாட்டாது நாடித்தொடர்ந்து செல்லுதற்கு அறிகுறியாக எம்பெருமானுக்குப்பின்னே பாராயணஞ்செய்யப்பட்டுவருதலும்; தமிழ் வேதமாகிய திவ்வியபிரபந்தம் அவனதுசொருபத்தையுணர்ந்து முன்செல்லுதல் தோன்ற முன்னே ஓதப்படுதலுங் காண்க; எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக்கூற வேண்டுவது மரபாதலால், 'வேதம்' என்று தொடங்கினர்.

2. சுடரிரண்டேபண்டுமூன்றாயினதுகடீர்ந்துலகத்
திடரிரண்டாய்வரும்பேரிருள்சீப்பனவெம்பிறப்பை
யடரிரண்டாமலர்த்தாளுடையான்குருகைக்கரசன்
படரிருங்கீர்த்திப்பிரான்றிருவாய்மொழிப்
பாவொடுமே.

(இ - ள்) சுடர் - ஒளிகள், பண்டு - முன்பு, இரண்டே - இரண்டேயிருந்தன; (பின்பு),—துகள் தீர்ந்து - குற்றமில்லாமல், உலகத்து இடர் இரண்டு ஆய் வரும் பேர் இருள் சீப்பன - உலகத்தில் இருவகைப்பட்ட துன்பங்களாய் வருகிற பெரியஇருளை நீக்குபவையான, எம்பிறப்பை அடர் இரண்டு ஆம் மலர் தாள் உடையான் குருகைக்கு அரசன் படர் இருங் கீர்த்தி பிரான் திருவாய்மொழி பாடுவோம் - எமது பிறவித்துன்பங்களையழிக்கின்ற தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளை யுடையவரும் திருக்குருகூர்க்குத்தலைவரும் பரவிய மிக்ககீர்த்தியையுடைய பெருமானுமாகிய நம்ஆழ்வாருடைய திருவாய்மொழிப்பிரபந்தத்தின் பாசுரங்களோடு (கூடி), மூன்று ஆயின - மூன்றாய்விட்டன; (எ - று.)

இங்கு, விசேஷமாக 'சுடர் இரண்டே பண்டு' என்றது - இராமபிரானையுங் கண்ணபிரானையும் குறித்தது. துவாபரயுகாந்தத்திலே கண்ணன் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளியவுடன் கலியுகம்பிறந்த நாற்பத்திமூன்றுநாளில் ஆழ்வார் அவதரித்து முப்பத்தைந்து வருஷம் இவ்வுலகத்தில் வாழ்ந்திருந்தன ரென்று உணர்க.

8. பாவொடுக்குந்நுண்ணிசையொடுக்கும்பலவும் பறையு
நாவொடுக்குந்நல்லறிவொடுக்கும்மற்றுநாட்டப் பட்ட
தேவொடுக்கும்பரவாதச்செருவொடுக்குங்குருகூர்ப்
பூவொடுக்கும்மமுதத்திருவாயிரம்போந்தனவே.

(இ-ள்.) குருகூர் பூ ஒடுக்கும் - திருக்குருகூரில் அவதரித்தருளின ஆழ்வாருடைய திருவாய்மலரினுள்ளே (எம்பெருமானால்) நிறைத்துவைக்கப்பட்ட, அமுதம் திரு ஆயிரம் — அமிருதம்போலினிய திருவாய்மொழி ஆயிரஞ்செய்யுள்கள், போந்தன - (அங்குநின்று) வெளிப்பட்டன: (அவை), பா ஒடுக்கும் - இயற்றமிழ்ச் செய்யுளிலக்கணங்களைத் தம்முள் அடக்கிக் கொண்டுள்ளன; நுண் இசை ஒடுக்கும் - நுட்பமான இசைத் தமிழினிலக்கணங்களைத் தம்முள் அடக்கிக்கொண்டுள்ளன; பலவும் பறையும் நா ஒடுக்கும் - பல விஷயங்களையுங் கூறுகிற நாடகத்தமிழினிலங்களைத் தம்முள் அடக்கிக்கொண்டுள்ளன; நல் அறிவு ஒடுக்கும் - நல்ல அறிவுகளைத் தம்முள் அடக்கிக் கொண்டுள்ளன; மற்றும் நாட்டப்பட்டதே ஒடுக்கும் — உலகத்தில் நிலைநிறுத்தப்பட்ட மற்றைத்தெய்வங்களையெல்லாம் ஒடுங்கச்செய்வன; பர வாதம் செருஒடுக்கும் - அந்நியமதஸ்தர்களின் வாதப்போர்களை அடங்கச்செய்துவிடுவன; ((எ - று.)

எம்பெருமான் தானே, ஸத்வகுணம் மிக்கவராய்த் தன்னைப் பற்றுமளவுடையரன்றியே யிருக்கும் ரஜோகுணதமோ குணங்களால் மிக்கவர்க்கு ஏற்றபடி பலதேவதைகளை நியமித்து வைத்துள்ளானாதலால், 'நாட்டப்பட்ட தே' என்றார். தன்னரசு நாடக ஸ்வதந்திரராய்க் கண்டபடி திரிகிறவர்களுக்கு அவரவர் குணத்துக்கு ஏற்ப ஒவ்வொரு தெய்வத்தை அமைத்துக்காட்டி அதனை வழிபடும்படிசெய்து அவர்களை அடக்கிவைத்தால் அங்ஙனம் ஒருப்பட்டசேதனர்கள் பின்புநாளடைவிலே வேதமுதலிய நூல்களைக்கொண்டு அச்சிறுதெய்வங்களுக்கும் பரதேவதையான தனக்குமுள்ள வாசியை யறிந்து தன்பக்கல்வந்துஉய்வார்கள். என்பது, ஸர்வேசுவரனது திருவுள்ளமென்க.

4. தனமாஞ்சிலர்க்குத்தவமாஞ்சிலர்க்குத்தருமநிறை
கனமாஞ்சிலர்கதற்காரணமாஞ்சிலர்க்காரணத்தி
னினமாஞ்சிலர்க்கதற்கெல்லையுமாந்தொல்லையேர்
வகுள
வனமாலையெம்பெருமான் குருகூர் மன்னன்
வாய்மொழியே

(இ - ள்.) தொல்லை - பழமையான, ஏர் - அழகிய, வகுளம் வனம் மாலை எம்பெருமான் குருகூர் மன்னன் வாய்மொழி — மகிழ மலர்களினாலாகிய அழகிய மாலையையுடையவரும் எமக்கு இறைவரும் திருக்குருகூர்க்குத் தலைவருமான ஆழ்வாருடைய திருவாய்மலரினின்று வெளிப்பட்ட சொற்களாகிய திருவாய் மொழி முதலிய பிரபந்தங்கள், —சிலர்க்கு— தனம் ஆம் — செல்வமாம்; சிலர்க்கு, —தவம் ஆம் —; சிலர்க்கு—, தருமம் நிறை கனம் ஆம் - தருமம் நிறைந்த சிறந்தகாமபுருஷார்த்த மாம்; சிலர்க்கு—. அதற்கு ஆரணம் ஆம் — அந்தக்காமவின்பத் திற்கு உரிய வேதமாம்; சிலர்க்கு—, ஆரணத்தின் இனம் ஆம் — வேதத்தின்வருக்கமாம்; (சிலர்க்கு—,), அதற்கு எல்லையும் ஆம்- அவ்வேதத்தின் முடிவாகிய வேதாந்தமுமாம்; (எ - று.)

லோகநாயகனுடைய சேர்க்கையை அபேக்ஷிக்கின்ற பேரின்பக் காதல், வேதாந்த நிர்ணயத்தின்படி அன்பு செலுத்த வேண்டிய இடத்தில் அன்பைச் செலுத்தியதாதலால், சிற்றின்பக்காதல்போலன்றி, சகலபாபநிவ்ருத்திக்கும் வீடுபேற்றுக்குமே காரணமாதல்பற்றி, 'தருமம்நிறைகனம்' எனப்பட்டது.

'ஆரணத்தின் இனமாம்' என்றது - ஆழ்வார் அருளிய நான்குபிரபந்தங்களும் நான்கு வேதமாதலால், அவ்வேதங்களின் சித்தாந்தமான உபநிஷத்துக்களின்சாரமான அர்த்தங்கள் ஆழ்வாரருளிச்செயல்களிற் பொதிந்திருந்தல்பற்றி, அதற்கு எல்லையுமாம், எனப்பட்டது;

5. மொழிபலவாயினசெப்பம்பிறந்ததுமுத்தியெய்தும்
வழிபலவாயவிட்டொன்றாயதுவழுவாநரகக்
குழிபலவாயினபாழ்பட்டதுகுளிர்நீர்ப்பொருநை
சுழிபலவாளையொழுகுங்குருகூரெந்தை
தோன்றலினே

(இ - ள் ) குளிர் நீர் - குளிர்ந்த நீரையுடைய, பொருநை- பொருநை யென்னும் மறுபெயருள்ள தாமிரபர்ணிநதி, சுழி பல ஆய் ஒழுகும் - அநேக நீர்ச்சுழிகளோடுகூடிப் பாயப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரிலே, எந்தை - நம்ஆழ்வார், தோன்றலின் - திருவவதரித்ததனாலே, — மொழி பல ஆயின - பலபாஷைக ளுள்ளே, செப்பம் பிறந்தது - (ஆழ்வார் பாசுரம் அருளிச்செய்த பாஷையாகிய தமிழ் ஒன்றுக்கே 'செந்தமிழ்மொழி' என்னும்படி) செவ்வை தோன்றிற்று; முத்தி எய்தும் வழி பல ஆய விட்டு ஒன்று ஆயது - விடுபெறுவதற்கு உரியவழிகள் பலவானவை நீங்க ஒன்றே முத்திமார்க்கமாய் நின்றது; வழுவா நரகம் குழி பல ஆயின பாழ்பட்டது - தவறாத நரகக்குழிகள் பலவாயிருந் தவை பாழாய்விட்டன; (எ - று.)

நம்மாழ்வார்க்கு, பூதத்தாழ்வாரை முடியாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேக ராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண் டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும் திருமங்கை யாழ்வாரை நாபியாகவும், மதுரகவியாழ்வாரைப் பாதமாகவும் உரைப்பது மரபு.

'முக்தி' என்ற வடசொல் - பற்றுகளை விட்டு அடையுமிட மென்று காரணப் பொருள்படும்; வீடு என்ற தமிழ்ச்சொல்லும் இப்பொருளதே. எந்தை - எம்தந்தை: எமது ஆசிரியன், எமது தலைவன், எமது கடவுள்.

6. தோன்றுவுபநிடதப்பொருடோன்றலுற்றார் தமக்குஞ்
சான்றுமிவையென்றபோதுமற்றென்பலகாலுந் தம்மின்
மூன்றுயினவுநினைந்தாரணத்தின்மும்மைத்தமிழை
யீன்றான்குருகைப்பிரானெம்பிரான்றனிசைக் கவியே.

(இ - ள்.) பல காலும் தம்மில் மூன்று ஆயினவும் நினைந்து பல இடங்களிலும் ஒருங்குகூறப்பட்டுத் தமக்குட் சேர்ந்துள்ளன வான ஸ்வரூபம் உபாயம் புருஷார்த்தம் என்ற மூன்றையும் (யாவருமறியவேண்டியவை யென்று) திருவுள்ளத்திற்கொண்டு

(அவற்றை வெளியிட்டு), ஆரணத்தின் மும்மை தமிழை ஈன்றுன் வேதங்களின் ஸாரார்த்தம் அமைந்தனவும் இயல் இசை நாடக மென்னும் மூன்றுவகைத் தமிழிலக்கணங்களமைந்தனவுமான திவ்வியப்பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந் தருளியவரும், குருகை பிரான் - திருக்குருகூரில் அவதரித்த பரமோபகாரியும், எம்பிரான்தன் - எம்க்குத்தலைவருமான நம்ஆழ்வாருடைய, இசை கவி இவை - பண்ணிசையோடு கூடிய இந்தத்திருவாய்மொழி முதலிய பாசுரங்கள், தோன்று உபநிடதம் பொருள் தோன்றல் உற்றூர்தமக்கும் சான்று ஆம் – புலப்படுதற்கு அரிய உபநிஷத்துக்களின் மகாவாக்கியார்த்தங்கள் புலப்படப் பெற்றவர்களான (ஸ்ரீ மதுரகவி ஸ்ரீ மந்நாதமுனி முதலிய) மகான்களுக்கும் மெய்ப் பொருளின் உண்மை விளங்குதற்கு ஏற்ற சாட்சியாம்: என்ற போது - இங்ஙனமாகியபோது, மற்று என் - இன்னம் இவற்றிற்கு என்ன சிறப்பு வேண்டும்! [மற்றொன்றும் வேண்டா என்றபடி]; (எ - று.)

7. கவிப்பாவமுதமிசையின்கறியொடு
கண்ணனுண்ணக்
குவிப்பான்குருகைப்பிரான்சடகோபன்
குமரிக்கொண்கன்
புவிப்பாவலர்தம்பிரான்றிருவாய்மொழிபூசுரர்தஞ்
செவிப்பாலுழைந்துபுக்குள்ளத்துளே நின்று
தித்திக்குமே.

(இ - ள்.) கவி பா அமுதம் - (தான்பாடும்) பாசுரங்களாகிய பரவிய இனிய உணவை, இசையின் கறியொடு - பண்ணிசைகளாகிற கறிவருக்கத்துடனே, கண்ணன் உண்ண குவிப்பான் திருமால் அமுது செய்தருளும்படி மிகுதியாகச் சேர்த்துப் பரிமாறுபவரும், குருகைபிரான் - திருக்குருகூருக்குத் தலைவரும், சடகோபன் - சடகோபனென்னுந் திருநாமமுடையவரும், குமரி கொண்கன் - குமரியாற்றுக்குத் தலைவரும், புவிபாவலர்தம் பிரான் - உலகத்திலுள்ள கவிசனங்கட்கெல்லாம் தலைவருமான நம் ஆழ்வாருடைய அருளிச்செயலான, திருவாய்மொழி - திருவாய்மொழியென்னுந் திவ்வியபிரபந்தமானது, — பூசுரர்தம் செவிப்பால் நுழைந்து – அந்தணர்களுடைய காதுகளிலே (குருமுகமாகச்) சென்று, உள்ளத்துளே புக்கு - (அவர்களுடைய)

மனத்திலே புகுந்து, நின்று - (அங்கு) நிலைபெற்று, தித்திக்கும் - இனிமை விளைக்கும்; (எ - று.) — ஈற்று ஏகாரம் தேற்றம்.

குமரியென்னும் நதியையுடைய பாண்டியநாட்டில் தலைமைபெற்று விளங்குகிறவரென்பது, 'குமரிக்கொண்கன்' என்பதன் கருத்து. நாவில் மாத்திரமே தித்தித்து வாய்வழியாய் வயிற்றினுட் புகுந்து ஜீரணிக்கிற தேனும் பாலும் கன்னலும் அமுதும்போலன்றி, திருவாய்மொழியமுதம் செவிவாயிலாக நுழைந்து உள்ளத்துள்ளே புக்குநின்று தித்திக்குமென்க.

8. தித்திக்குமூலத்தெளியமுதேயுண்டுதெய்வ
மென்பார்
பத்திக்குமூலம்பனுற்குமூலம்பவமறுப்பார்
முத்திக்குமூலமுளரிக்கைவாணகைமொய்குழலா
ரத்திக்குமூலங்குருகைப்பிரான்சொன்னவாயிரமே.

(இ - ள்.) குருகை பிரான் சொன்ன ஆயிரம் - திருக்குருகூர்க்கு இறைவரான நம் ஆழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்கள்,—தித்திக்கும் மூலம் தெளிஅமுதே - இனிமை விளைக்கின்ற பழமையான தெளிவுகொண்ட அமிருதமென்பது மாத்திரமோ? தெய்வம் உண்டு என்பார் பத்திக்கு மூலம் - தெய்வம் உள்ளது என்கிற ஆஸ்திகர்களுடைய பக்திக்குக் காரணமும், பனுவற்கு மூலம் - மற்றைய பிரபந்தங்கள் பலவற்றிற்கும் முதனூலும், பவம் அறுப்பார் முத்திக்கு மூலம் - பிறப்பையொழிக்க விரும்புபவர்களான முமுக்ஷுக்கள் முக்தியடைவதற்கு முக்கிய சாதனமும், முளரி கை வாள் நகை மொய் குழலார் அத்திக்கு மூலம் - செந்தாமரைமலர் போன்ற கைகளையும் ஒளியுள்ள பற்களையும் அடர்ந்தகூந்தலையுமுடைய மாதர்களின் விஷயமான ஆசையை அறக்கெடுப்பதற்கு ஏதுமாம்; (எ - று)

ஆழ்வாரருளிச்செயலாகிய தென்மொழிவேதம் வடமொழி வேதம்போலவே அநாதியான முதனூலென்பதுபற்றி, அந்த அமுதுக்கு 'மூலம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. ''பழகப் பழகப் பாலும் புளிக்கும்'' ''அழவுக்கு மிஞ்சினால் அம்ருதமும் விஷமாம்'' என்ற குற்றங்கள் இந்த ஆராவமுதுக்கு இல்லையென்பது தோன்ற, 'தித்திக்குமூலத் தெளியமுது' என்றன ரென்னலாம்.

கையழகு, பல்வரிசையினழகு, கூந்தலழகு முதலியவற்றைக் கொண்டு பெண்டிர் ஈடுபடுத்த ஆடவர் அவற்றில் ஈடுபடுதல் இயல்பென்பது தோன்ற, அவர்களை 'முளரிக்கை வாணகை மொய்குழலார்' என வருணித்தனர்.

9. ஆயிரமாமறைக்குமலங்காரமருந்தமிழ்க்குப்
பாயிரநாற்கவிக்குப்படிச்சந்தம்பனுவதற்கெல்லாந்
தாயிருநாற்றிசைக்குத்தனித்தீபந்தண்ணங்குருகூர்ச்
சேயிருமாமரபுஞ்செவ்வியான்செய்த செய்யுட்களே.

(இ - ள்.) தண் அம் குருகூர் - குளிர்ச்சியான அழகிய திருக்குருகூரில் அவதரித்த, சேய் – குமாரரும், இரு மா மரபும் செவ்வியான் – (தாய்மரபு தந்தைமரபு என்ற) இரண்டு சிறந்த வம்சங்களிலும் மேன்மையையுடையவருமான ஆழ்வார், செய்த - அருளிச்செய்த, செய்யுட்கள் - பாசுரங்கள், — ஆயிரம் மா மறைக்கும் அலங்காரம் – மிகப்பலவாகவுள்ள சிறந்த வேதங்கட்கெல்லாம் அழகுசெய்வனவாம்; அருந் தமிழ்க்கு பாயிரம் – (இன்சுவையினால்) அருமைமிக்க தமிழ்ப்பாஷைக்கு முகவுரையுமாம்; நால் கவிக்கு படிச் சந்தம் - நால்வகைக்கவிகளுக்கும் மாதிரிக்காப்பியமுமாம் பனுவற்கு எல்லாம் தாய் – எல்லா நூல்களுக்கும் தாயுமாம்; இருநால்திசைக்கு தனி தீபம் - எட்டுத் திக்குக்கும் ஒப்பற்ற விளக்குமாம்; (எ - று.)

நாற்கவி - ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, விஸ்தாரகவி என்பன. திருவழுதிவளநாடரென்றொருவர்; அவர் பிள்ளை அறந்தாங்கியார்; அவர் பிள்ளை சக்கரபாணியார்; அவர் பிள்ளை அச்சுதர்; அவர் பிள்ளை செந்தாமரைக்கண்ணர்; அவர் பிள்ளை செங்கண்ணர்; அவர் பிள்ளை பொற்காரியார்; அவர் பிள்ளை காரியார்; அவர் பிள்ளை மாறன் என்ற சடகோபர்.

'திருவள்ளுவர் குறள்செய்தகாலத்தில், அவரும் ஔவையும் இடைக்காடரும் சந்தித்த சமயத்தில், வள்ளுவரை நோக்கி மற்றை இருவரும் 'நீர் செய்த நூல் எத்தன்மைத்தாகியது?' என்று வினவ, அவர் 'அகஸ்தியரால் பிரசித்தம் பண்ணப்பட்ட இயல் இசை நாடகம் என முத்திறத்ததாகிய தமிழும், என்னாற்செய்யப்பட்ட குறளும் உடையநங்கையின் திருக்குமார

ராகிய சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியின் புத்ர ஸ்தானமாகிய வழிநூலாம்' என்னுங் கருத்தை உள்ளமைத்து ''குறுமுனிவன்முத்தமிழும் என்குறளும் நங்கை, சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்'' என்று சொன்னதையும்; அதுகேட்டு, ஔவை 'அர்த்தபஞ்சகத்தையும் சதுர்விதபுருஷார்த்தத்யையும் அறப்பால்முதலிய முப்பாலுள் அடக்கி அமைக்கப்பட்ட உண் மைப்பொருளாகிய எவ்வகைப்பட்ட வேதங்களுக்குஞ் சம்மத மான மேலானபொருளை, குளிர்ச்சிதங்கிய தாமிரபருணிதீரத்தி லிருக்குந் திருக்குருகூரிற் காரிமுதலியார்புதல்வராய் அவதரித்த நம்மாழ்வாரது திருவாய்மொழியாகிய திராவிட வேதமென்று சிலர் சொல்லுவார்கள்;

10\. செய்யோடருவிக்குருகைபிரான்றிருமாலைநங்கள்
கையோர்கனியெனக்காட்டித்தந்தான்கழற்
கேகமலம்
பெய்யோமவன்புகழேத்திப்பிதற்றிப்பித்தாய்த்
திரியோ
மையோவறிதுமென்றேயுபகாரத்திறுற்றலையே

(இ - ள்.) செய் - வயல்களில் ஓடு - விரைந்துபாய்கின்ற, அருவி - நீர்ப்பெருக்கையுடைய, குருகை — திருக்குருகூரில் அவ தரித்த, பிரான் - தலைவரான ஆழ்வார், திருமாலை — ஸ்ரீமந்நாரா யணனை நங்கள் கை ஓர்கனி என காட்டி தந்தான் - நம்முடைய கையிற் கிடைத்ததொரு பழத்தைப்போல (ஸ்வரூபம் நன்கு விளங்கும்படி) காட்டி உபகரித்தருளினர்; (அவன்) கழற்கே - அங்ஙனம் பரோபகாரஞ்செய்தவருடைய திருவடிகளிலே, கமலம் பெய்யோம் - தாமரைமலர்களை இட்டு அருச்சிக்கின்றோ மில்லை! அவன் புகழ் ஏத்தி பிதற்றி பித்து ஆய் திரியோம் - அந்த ஆழ்வாருடைய கீர்த்தியை எடுத்துத் துதித்துப் பலகாலுஞ் சொல்லி (அவ்விஷயத்திலே நம்மைப்) பித்தரென்றே (பிறர் சொல்லும்படி) பரவசமாய்த் திரிதலுஞ் செய்திலோம்!! ஐயோ - அந்தோ! உபகாரத்தின் ஆற்றலை என்றே அறிதும் - (ஆழ்வார் செய்தருளிய) உதவியின் பெருமையை என்றைக்குத்தான் அறிவோம்! (எ - று.)

எவ்வாற்றலும் உணர்தற்கு அரிய பகவானுடைய சொரு பத்தை ஆழ்வார் தெளிவாகஉணர்த்திவிளக்கி எளிதிற் காட்டி

யருளினமையாகிய பேருதவிக்கு உலகத்தவரனைவரும் கடமைப் பட்டிருக்கவும் பெரும்பாலார் அதனை உணர்ந்து அவர் திறத்தில் வழிபாடுசெய்தலின்றிப் பழுதேபலபகலும் போக்குதலைக் குறித்துக் கழிவிரக்கமாகக் கூறியவாறும், அவருடைய திரு வடிகளில் மலர்களைக்கொண்டு அருச்சனைசெய்தும் அவர்புக ழையே எப்பொழுதும்எடுத்துச்சொல்லியும் உய்தல் தவிர, அவர் செய்த பேருதவிக்கு ஏற்றபடி பிரதியுபகாரஞ்செய்யக்கூடிய தொன்றுமில்லையென்பதும் இதிற் போதரும்.

11. ஆற்றிப்பொதிந்தமணலின்றொகையருமா
மறைகள்
வேற்றிற்பொதிந்தபொருள்களெல்லாம்
விழுமாக்கமலஞ்
சேற்றிற்பொதியவிழ்க்குங்குருகூரர்செஞ்சொற்
பதிக
நூற்றிற்பொதிந்தபொருளொருகூறுநுவல்கிலவே.

(இ - ள்.) ஆற்றில் பொதிந்த மணலின்தொகை - ஒருநதி யிலேபொருத்தின மணல்க ளெத்தனையோ அத்தனையாகவுள்ள [அநந்தங்களென்னும்படி அளவிறந்தனவான]. அரு மா மறை கள் வேற்றில் - (ஓதியுணர்தற்கு) அரியனவும் சிறந்தனவும் பல வேறு வகைப்பட்டனவுமாகிய வேதங்களனைத்திலும், பொதிந்த- உள்ளடங்கிய, பொருள்கள் எல்லாம் — சகல அர்த்தங்களும், — விழு மா கமலம் — சிறந்த பெரிய தாமரைமலர்கள், சேற்றில் பொதி அவிழ்க்கும் — சேறுள்ளவிடங்களிலெல்லாம் கட்டவிழ்த்து மலரப்பெற்ற, குருகூரர் — திருக்குருகூரிலவதரித்தவரான ஆழ் வார் அருளிச்செய்த, செம் சொல் பதிகம் நூற்றில்—செந்தமிழ்ச் சொற்களாலாகிய நூறுதிருப்பதிகங்களில், பொதிந்த — நிரம்ப அமைந்த, பொருள் - அருத்தத்தின், ஒரு கூறும் — ஒருபகுதியை யாயினும், நுவல்கில - சொல்லமாட்டிற்றில; (எ - று) — ஏ - தேற்றம்.

## [இயலிடங்கூறல்.]

12. இலவேயிதழுளவேமுல்லையுள்ளியம்பும்
மொழியுஞ்
சிலவேயவைசெழுந்தேனொக்குமேதமிழ்ச்
செஞ்சொற்களாற்
பலவேதமுமொழிந்தான்குருகூர்ப்பதுமத்திரண்டு
சலவேல்களுமுளவேயதுகாணென்றனியுயிரே.

(இ-ள்.) தமிழ்ச் செம் சொற்களால் பல் வேதமும் மொழிந்தான் - செவ்விய தமிழ்மொழிகளினாற் பலவகைவேதங்களின் பொருளையெல்லாம் அருளிச்செய்தவரான ஆழ்வாருடைய (திருவவதார ஸ்தலமாகிய), குருகூர் - திருக்குருகூரிலே, பதுமத்து - ஒரு தாமரைமலரிலே இதழ் - இதழ்கள், இலவே - இலவமலரே போலும்; (அவ்விதழ்களினுள்ளே), முல்லை உளவே - முல்லையரும்புகள் உள்ளனவே; உள இயம்பும் மொழியும் சிலவே - அவற்றுள்ளே பேசப்படும் பேச்சுக்களும் சிலவே (உண்டு); அவை - அந்தச் சின்மொழிகள்தாம், செழுந் தேன் ஒக்குமே - சுவைமிக்க தேனையே போலும்; (மற்றும் அத்தாமரை மலரில்), இரண்டுசலம் வேல்களும் உளவே - அசைகின்ற இரண்டு வேலாயுதங்களும் உள்ளனவே; அது காண் என் தனி உயிரே - (இவையனைத்தையுமுடைய) அவ்வுருவந்தான் எனது தனிப்பட்ட உயிர்போன்ற காதலி யென்று (நீ) உணர்வாய்; (எ - று.)

'இதழ்' என்றது - இங்கு, வாயிதழ்களை. அவற்றிற்கு இலவம்பூ உவமை - செம்மைக்கும், மென்மைக்கும். 'முல்லை' என்றது - அவ்வரும்புகள்போல் வெண்ணிறமான வடிவை யுடைய பற்களின் வரிசையை. மொழிக்குத்தேன் உவமை - இனிமையில். கண்டவர் கண்களைக் களிப்பிக்குங் கட்டழகு பற்றி முகம் 'பதுமம்' என்றும், கூரியவடிவும் ஆடவர்நெஞ்சிற் பாய்ந்து அதன் வலிமையைக் கெடுத்து அதனை வருத்துந்திறமும் பற்றிக் கண் 'வேல்' என்றுங் கூறப்பட்டன.

13. உயிருருக்கும்புக்குணர்வுருக்கும் முடலத்தினுள்ள
செயிருருக்கொண்ட நந்தீங்குருக்குந்திருடித்
திருடித்
தயிருருக்குந்நெய்யொடுண்டானடிச்சடகோபன்
சந்தோ
டயிருருக்கும்பொருநற்துருகூரெந்தையந்தமிழே.

(இ - ள்.) தயிர் - தயிரையும், உருக்கும் நெய்யோடு - உருக்குதற்குஉரிய வெண்ணெயையும், திருடி திருடி உண்டான - (திருவாய்ப்பாடியில்) இடந்தொறும் நாள்தொறும் எப்பொழுதும் மிகுதியாகக் களவாடி அமுதுசெய்தருளியவனான திருமாலினது, அடி - திருவடிநிலையாகிய, சடகோபன் - சடகோபனென்னுந்

திருநாமமுடையவரும், சந்தோடு அமிர் உருக்கும் பொருநல் குருகூர் எந்தை — (பரிமளத்தாற்) சந்தனத்தையும் (சுவையினி மையாற்) சருக்கரையையுந் தோற்கச் செய்கின்ற பொருநை யென்னுந் தாமிரபர்ணிநதி பாயப்பெற்ற திருக்குருகூரில் அவ தரித்தவருமான நம்மாழ்வாருடைய. அம் தமிழ் - அழகிய தமிழ்ப்பாசுரங்கள்,—உயிர் உருக்கும் - (ஓதுகிற நம்முடைய) உயிரை (ப்பக்தி மிகுதியினால்) உருக்கச்செய்யும்; புக்கு உணர்வு உருக்கும் — உள்ளே பிரவேசித்து (அகத்துஉறுப்பான) மனத்தை (ஆனந்தாதிசயத்தாற்) கரையச்செய்யும்; செயிர் உரு கொண்ட நம் உடலத்தின் உள்ள தீங்கு உருக்கும் — குற்றந் தானே புருஷவடிவங்கொண்டாற் போன்ற நமது தேகசம்பந்தத் தாலாகிய (காமம் கோபம் முதலிய) பொல்லாங்குகளைப் போக் கும்; (எ - று.)

பெருமாள் கிருஷ்ணவதாரத்திற் கோகுலத்திலே ஆய்ச் சியர்வைத்த பால் தயிர் வெண்ணெய் நெய் முதலியவற்றைக் களவு செய்துஉண்டமை, பிரசித்தம். ஆழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கபக்தராக இருந்ததுபற்றி அப்பெருமானதுபாதுகை 'ஸ்ரீசடகோபன்' என்று இவரது திரு நாமத்தை யிட்டு வழங்கப்படுதல் தோன்ற, 'உண்டானடிச்சட கோபன்' என்றாரென்க

14. அந்தமிலாமறையாயிரத்தாழ்ந்தவரும்பொருளைச்
செந்தமிழாகத்திருத்திலனேனிலத்தேவர்களுந்
தந்தம்விழாவுமழகுமென்னுந்தமிழார்கவியின்
பந்தம்விழாவொழுகுங்குருகூர்வந்த
பண்ணவனே.

(இ - ள்.) ஆர் தமிழ் கவியின் — (இலக்கணம்) நிரம்பிய தமிழ்ப்பாடல்கள் (சீர்கேடின்றி ஒழுகுதல்) போல, பந்தம் விழா ஒழுகும் - ஒழுங்காக [முறைமைதவறாமல்] நித்திய நைமித்திக உத்ஸவங்கள் நடக்கப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரில், வந்த- அவதரித்த, பண்ணவன் - பெரியவரான ஆழ்வார், அந்தம் இலா மறை ஆயிரத்து ஆழ்ந்த அரும்பொருளை - அழிவில்லாதன வும் அநேக ஆயிரம் சாகைகளாகவுள்ளனவுமான வேதங்களின் ஆழ்ந்த அருமையான ஸாரார்த்தத்தை, செம் தமிழ் ஆக திருத் திலனேல் - செவ்விய தமிழ்த்திவ்யபிரபந்தங்களாகச் சீர் திருத்தி அருளிச்செய்யா திருந்தனராகில், நிலத்தேவர்களும்

தம் தம் விழாவும் என் ஆம் - அந்தணர்களும் (அவ்வந்தணர் களில்) அவரவர் கொண்டாடிச்செய்யுந் தேவாலய உத்ஸவங் களும் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயும் யாதாய் முடியும்? [சிறிதும்சிறப்புரு என்றபடி]; (எ - று.)

கோயில்களில் நிகழும் நித்தியநைமித்திகஉத்ஸவங்களி லெல்லாம் தமிழ்வேதங்களையோதவேண்டுமென்பது ஸ்ரீபாஞ்ச ராத்திராதிசாஸ்திரசம்மத மென்பதும், "குருகூர்ச்சடகோபன் சொன்ன, குறிகோளாயிரத்துள்ளிவைபவத்தும் திருக்குறுங் குடியதன்மேல், அறியக்கற்றுவல்லார் வைட்டணவ ராழ்கடல் ஞாலத்துள்ளே" என்றபடி அருச்செய லோதினுலே ஸ்ரீவைஷ்ண வத்வ பூர்த்தியுண்டா மென்பதும் பற்றி இங்ஙனங்கூறினர்.

15. பண்ணப்படுவனவும்முளவோமறையென்று பல்லோ
ரெண்ணப்படச்சொற்றிகழச்செய்தானிய லோடிசையின்
வண்ணப்படைக்குத்தனித்தலைவேந்தன் மலருகுத்த
சுண்ணப்படர்படப்பைக்குருகூர்வந்த சொற்கடலே.

(இ - ள்) இயலோடு இசையின்வண்ணம் படைக்கு - இயற்றமிழ்த் துறைவகைகளும் இசைத்தமிழ்த்துறைவகைகளு மாகிய சேனைகட்கு, தனி தலை வேந்தன் - ஒப்பற்ற தலைமை பூண்ட அதிபதியும்,— மலர் உகுத்த சுண்ணம் படர் - பூக்கள் சிந்திய மகரந்தப் பொடிகள் பரவப்பெற்ற, படப்பை — மருத நிலத்துஊராகிய, குருகூர் — திருக்குருகூரில், வந்த-அவதரித்த சொல் கடல் - சொற்கள் நிறைந்த கடலுமாகிய ஆழ்வார்,— பண்ணப்படுவன மறையும் உளவோ என்று பல்லோர் எண்ணப் பட - (நூதனமாகச்) செய்யப்படுவனவாகிய வேதங்களும் உண்டோவென்று பலபேராலும் கருதப்படுமாறு, சொல் திகழ - சொற்கள் சிறப்புற்று விளங்க, செய்தான் - (தமிழ்த்திவ்வியப் பிரபந்தங்களை) அருளிச்செய்தனர்;

95. தவஞ்செய்வதுந்தழல்வேள்விமுடிப்பதுந் தம்மையொறுத்
தெவன்செய்யுமெய்யன்குருகைப்பிரானெம் மையின்னமொரு
பவஞ்செய்கைமாற்றியபண்டிதன்வண்டமிழ்ப் பாவுமுண்டே
யவஞ்செய்கைமாற்றச்செவியுண்டுநாவுண்டறிவு முண்டே.

(இ - ள்.) தம்மை ஒறுத்து - தங்களை வருத்தி, தவம் செய்வதும் - தவத்தைச் செய்வதும், தழல் வேள்வி முடிப்பதும் - அக்கினிமுகமாக யாகத்தைச் செய்து முடிப்பதும், எவன் செய்யும் - யாது நற்பயனைத் தரமட்டும்?—அவம் செய்கை மாற்ற - கொடிய கருமங்களை யொழித்தற்கு,—மெய்யன் - உண்மைப் பொருளை உணர்ந்து உரைப்பவரும், குருகைப்பிரான் - திருக்குருகூரில் அவதரித்த உபகாரகரும், எம்மை இன்னம் ஒரு பவம் செய்கை மாற்றிய பண்டிதன் - (அடிமைபூண்ட) எங்களை இனிமேல் ஒரு பிறவிப்பிறத்தலைப்போக்கியருளிய புலவருமான நம்மாழ்வாருடைய, வண்தமிழ் பாவும் - (சொற்பொருட்கருத்துக்களின்) வளமுடைய, தமிழ்ப்பாசுரங்களும், உண்டு - இருக்கின்றன; செவி உண்டு - (அவற்றை அனைவரும் உபதேசமுகமாகக் கேட்பதற்கு அவரவர்களுக்குக்) காதுகளும் இருக்கின்றன; நா உண்டு - (ஓதிப் பாராயணஞ்செய்தற்கு) நாக்கும் இருக்கின்றது; அறிவும் உண்டு - (அதிலுள்ள அர்த்தபஞ்சகங்களை அறிதற்கு) அறிவும் இருக்கின்றது; (எ - று) - ஏகாரம் இரண்டும் - தேற்றம்.

வேதத்தின் முற்பகுதியாகிய கர்மகாண்டத்தை முக்கியமாகக் கொண்டு அதன்படி தவமும் வேள்வியும் செய்பவர்களை நோக்கி, 'அவை' அழியுமியல்பினவான சுவர்க்கம் முதலிய காமியபலன்களைத் தருவனவாய் முத்திக்கு நேரேகாரணமாகாமையாலும், சிரமசாத்தியமாயிருத்தலாலும், சிறந்தமார்க்கமாகா; திருக்குருகூரில் அவதரித்து லோகோபகாரமாய்த் தத்துவார்த்தங்களை வெளியிட்டுத் தமது அடியார்கள் இனியொரு பிறப்பின்றி முக்தியைப் பெறுமாறு அருள்செய்த பொய்யில் புலவராகிய நம்மாழ்வாருடைய அருளிச்செயல்களைக் கேட்டும் ஓதியும் உணர்ந்து அந்தமிலின்பத்து அழிவில்வீட்டை எளி

திற்பெறலாமேயென்று உயர்த்தியவாரும். 'பரமபதஞ் சேர்தற்குளிதான நல்வழி இருக்க, கடுநெறியைக் கைப்பற்றுவானேன்? என்றார்.

[தலைவன், தலைவியின்நோக்கினாலாய வருத்தங் கூறுதல்]

96. உண்டாட்டியலுந்திருமாலுருவையுயர்த்
துலகைத்
தொண்டாட்டியவந்துதோன்றியதோன்றறுறைக்
குருகூர்
நண்டாட்டியநங்கைநாட்டங்களாலிந்த
நாட்டையெல்லாந்
திண்டாட்டியகண்கள்போற்செய்யுமோ
கயறீங்குகளே.

(இ - ள்) உண்டாட்டு இயலும் - (பலவகைத்) திருவிளையாடல்கள் பொருந்திய திருமால் — ஸ்ரீமந்நாராயணனுடைய, உருவை - திருவுருவங்களை உயர்த்து - சிறந்தமோக்ஷசாதகமெனக் கூறி வெளியிட்டு, உலகை தொண்டு ஆட்டிய - உலகத்தவர்களை அப்பெருமானடியவர்களாகச் செய்தற்பொருட்டு, வந்து தோன்றிய - வந்துதிருவவதரித்த தோன்றல் பெருமையிற் சிறந்தவரான நம்மாழ்வாருடைய, துறை குருகூர் - (தாமிரபர்ணிநதியின் சங்கணிதுறையென்னுந் திருமுகத்துறையையுடைய திருக்குருகூரிலே, நண்டுஆட்டிய நங்கை - கைவளைகளை அசைத்துக்கொண்டு நடந்துவருகிற சிறந்த பெண்ணினது, நாட்டங்களால் இந்த நாட்டை எல்லாம் திண்டாட்டிய கண்கள் போல் - தம் பார்வைகளால் இவ்வுலகத்தவரையெல்லாம் வருத்துகின்றகண்கள்போல, கயல் தீங்குகள் செய்யுமோ — கயல்மீன்கள் வருத்தஞ்செய்யவல்லனவோ? [அல்ல என்றபடி]; (எ - று.)

படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய தொழில்களையெல்லாம் எம்பெருமான் சிறிதும்சிரமமின்றி மிகஎளிதில்விளையாட்டுப்போல நடத்துதலால், 'உண்டாட்டியலுந்திருமால்' என்றார். இக்கம்பர்தாமே இராமாயணத்தொடக்கத்தில் "உலகம்யாவையுந் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலாவிளையாட்டுடையாரவர், தலைவரன்னவர்க்கே சரண் நாங்களே" என்றதுங் காண்க.

97. தீயைக்கிழித்தொருதிங்கட்கொழுந்தெனச்செய்த
தல்லாற்
பேயைக்கிழித்தெனவன்றிற்பனேபிளவாருளவா
நோயைக்கிழிக்கும்வகுளநல்காரிந்தநுண்பிறவி
மாயைக்கிழியைக்கிழித்தெம்மைவாங்கிட
வல்லவரே.

(இ - ள்) இந்த—, நுண் பிறவி - எளிய தறப்பாகிய. மாயை கிளியை மாயாரூப்மான ஆடை எமது உயிரைப் போர்த்துள்ளதை. கிழித்து—, எம்மை—, வாங்கிட வல்லவர் - எடுத்துத் தமது திருவடிகளிற் சேர்த்துக்கொள்ள வல்லவராகிய எமது தலேவர், —தீயை கிழித்து – நெருப்பைத் துண்டாகப் பிளந்தெடுத்து (அப்பிளவை), ஒரு திங்கள் கொழுந்து என செய்தது அல்லால் ஒருபிறைச்சந்திரனுகச் செய்ததே யல்லாமல்,—அன்றில் பனே -அன்றிப்பறவைகட்கு இருப்பிடமான பனேமரத்தை, பேயைகிழித்து என பிளவார் - பேயை இரண்டாகக் கிழித்தார் போலப் பிளந்திட்டாரு மில்லே; உள ஆம் நோயை கிழிக்கும் வகுளம் நல்கார் - (அவர்விஷயமாக எமக்கு) உண்டாகிய காதல் நோயை நீக்கும்படியான மகிழம்பூமாலேயைக் கொடுத்தலுஞ் செய்யார்;

பனேமரம் அன்றிற்பறவைகள் கூடுகட்டி வாழுமிடமாம். காமோத்தீபகமான குரல்கொண்டு வருந்துகிற அப்பறவைகள் தங்குமிடமாகிய பனேமரத்தைப் பிளந்தெறிந்துவிட்டால், அப்பறவைகள் இங்கு நிலேபெருது அப்பாற்சென்றுவிடுமாதலால், தனக்கு அவற்ருலாகுந் துயர மின்ரு மென்பதுபற்றி, அதனே வேண்டுகின்றவர்களும், அது செய்யாமையைக்குறித்துத் தலேவன்மேற் குறைகூறுபவளு மாயினள், (முன்றில் தனி நின்ற பெண்ணேமேற் கிடந்தீர்கின்ற, அன்றிலின்கூட்டைப் பிரிக்க கிற்பவ ரார்கொலோ'' என்று ஒருதலேவி கூறியதுங் காண்க) 'கருநெடும்பனங்காடு முழுமையுங் காலுங்கையுமுடையது போல்வன'' என்னும்படி மனேமரமும் பேயும் வடிவில் ஒத்தலால். 'பேயைக்கிழித்தன அன்றிற் பனேபிளவார்' எனப்பட்டது.

98. வல்லம்புலிமுகவாயிற்கரும்பின்மறுபிறப்பைக்
கொல்லம்புலியொர்வகுளங்கொடார்
கொடுங்கோகுகட்டிச்

சல்லம்புலியிட் டெதிரிடப்பாய்வதுதா
யென்றிங்கோ
ரில்லம்புலியுமுண் டம்புலிமீளவெழுகின்றதே.

(இ - ள்.) அம் - நீரிற்பொருந்திய, புலி – தாமரைமலர் போன்ற, முகம் – திருமுகமண்டலத்திலேயுள்ள, வாயில் – திருவாய்மலரினின்று வெளியான, கரும்பின் – கருப்பஞ்சாறுபோலினிய திருவாய்மொழிமுதலிய திவ்வியப் பிரபந்தங்களைக் கொண்டு, வல் – விரைவிலே, மறு பிறப்பை கொல் – (கருமவசத்தால் மனிதர்கட்கு உண்டாகும்) மறுபிறப்பை யொழித்திட்ட, அம் புலி - அழகிய சிங்கம்போன்றவராகிய எமதுதலைவர் [நம்ஆழ்வார்], ஓர் வகுளம் கொடார் – ஒப்பற்ற (தமது) மகிழமலர்மாலையை (எனக்கு)த் தந்தருளுகின்றாரில்லை; கொடுங்கோகு உகட்டி - கொடுமையான முறைகேடு தலைக்கேறி [அக்கிரமம்விஞ்சி], சல்லம் புலியிட்டு எதிரிட பாய்வது - முள்ளம் பன்றியைப்போன்று எதிர்த்துப்பாய்வதாகிய, தாய் என்ற ஓர் இல்லம் புலியும் - தாயென்கிற ஒரு வீட்டுப்புலியும், இங்கு உண்டு - இவ்விடத்திலே (என்னை இடைவிடாது வருத்திக் கொண்டு) உள்ளது; (இவ்வளவோடு நிற்காமல்), அம் புலி மீள எழுகின்றது - (வானத்திலும்) ஓர் அம்புலி [சந்திரன்] (என்னை வருத்துமாறு) மீளவும் தோன்றுகின்றது; (எ - று.)—ஈற்று ஏகாரம் – இரக்கம்.

99. எழுதியநாளும்வினையுந்தொகுத்தெம்மையிப்
பிறவிப்
புழுதியினுற்றிட்டுவைப்பரிதாற்புகழ்மெய்ப்
புலவோர்
தொழுதியலுநயகனோதுங்கனற்றுறைநீர்ப்
பொருநைந
வழுதிநன்னுடன்றிருவாய்மொழியெம்
மனத்தனவே.

(இ – ள்.) புகழ் - கீர்த்தியையுடைய மெய் புலவோர் - உண்மைப் புலவர்கள் [தத்துவஞானிகள்] தொழுது இயல் - வணங்கி அடியார்களாகிய ஒழுகப்பெற்ற, நாயகன் . தலைவரும், ஓதும் கனல்துறை நீர் பொருநை வழுதி நல் நாடன் – (வேதங்களாற்) சொல்லப்படுகிற அக்கினிகாரியமாகிய யாகவகைகள் நடக்கப்பெற்றதும் நீர்நிறைந்த தாமிரபர்ணிநதி பாயப்பெற்றது

மாகிய சிறந்த பாண்டியநாட்டிலே திருவவதரித்தவருமான நம்மாழ்வார் அருளிச்செய்த, திருவாய்மொழி - திருவாய்மொழி யென்ற பிரபந்தத்தின் பாசுரங்கள், எம் மனத்தன - எமது மனத்திலே நிலைகொண்டிருக்கின்றன; (ஆதலால்),—எழுதிய நாளும் வினையும் தொகுத்து - (இவ்வளவென்று பிரமன் எமக்கு) எழுதி வைத்துள்ள ஆயுளையும் பழவினைத்தொடர்பையும் (எம்மோடு) இயைபுபடுத்தி, எம்மை—, இ பிறவி புழுதியில் நாற்று இட்டு வைப்பு - இவ்வாறு பிறத்தலாகிய புழுதிக்காலில் நாற்றாகநட்டு விளையும்படிவைத்தல், அரிது - முடியாததாம்; (எ — று) — ஆல் - ஈற்றசை.

கீர்த்திபெற்ற மதுரகவிகள் முதலிய உண்மைப்புலவர்கள் வணங்கி வழிபடப்பெற்ற பரமசாரியரும், வேதவிதிமுறை தவறாது நிகழும் வேள்விகளும் அவற்றின் பயனாகும் பருவமழைப் பெருக்கும் அருத பாண்டிவளநாட்டில் திருவவதரித்தவரு மாகிய நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழிப்பாசுரங்களை யான் இடையறாது சிந்தித்து வருகின்றேனாதலால், இனி என்னைப் பிரமன் வினைவசமாக ஆயுளைக்கற்பித்து இவ்வுலகத்திலே பல வகைப் பிறப்புக்களில் இட்டுவைக்கமுடியா தென்பதாம் "மாதவன்பாற் சடகோபன், தீதவமின்றியுரைத்த, ஏதமிலாயிரத் திப்பத்து, ஓதவலலார் பிறவாரே." "குருகூர்ச்சடகோபன், நேர்ந்தவோராயிரத்திப்பத்து அருவினைநீறு செய்யுமே" என்று ஆழ்வார்தாமே திருவாய்மொழியிற் பயன் அருளிச்செய்தபடி, அதனை அநுசந்தாநஞ் செய்வார் வினையனைத்துந் தொலைந்து பிறப்பற்று வீடுபெறுதல் நிச்சயமாதலால். இங்ஙனம் கூறினர்

100. மனையும்பெருஞ்செல்வமுமக்களுமற்றை வாழ்வுந்தன்னை
நினையும்பதமெனநின்றபிரான்குருகூர்நிமலன்
புனையுந்தமிழ்க்கவியாலிருணீங்கிப்பொருள் விளங்கி
வினையுந்திரிவுற்றனகுற்றநீங்கினவேதங்களே.

(இ - ள்) 'மனையும் - மனைவியும், பெருஞ்செல்வமும் —, மக்களும் - பிள்ளைகளும், மற்றை வாழ்வும் மற்றுமுள்ள வாழ்வுகளும், (ஆகிய இவையெல்லாம்), தன்னை நினையும் பதம் - ஆழ்வாராகிய) தம்மைத் தியானிக்கின்ற நிலைமைதான்' என -

என்று (ஸ்ரீவைஷ்ணவரெல்லாரும்) கொள்ளும்படி, நின்ற பிரான் - (அத்தொண்டர்குலத்துக்குத்) தலைவராய் நின்றவ ராகிய, குருகூர் நிமலன் - திருக்குருகூரில் அவதரித்த குற்ற மற்ற நம்மாழ்வார், புனையும் - பாடிய தமிழ கவியால் - தமிழ்ப் பாசுரங்களால், இருள் நீங்கி - அஜ்ஞாநாந்தகாரம் ஒழிந்து, பொருள் விளங்கி - தத்துவார்த்தம் விளங்க, வினையும் திரிவு உற்றன - (உயிர்களின்) கருமசமுகங்கம் அழிவடைந்தன; வேதங்கள் குற்றம் நீங்கின - வேதங்களும் (எளிதில் மெய்ப் பொருள் வுளங்காதிருந்த) குற்றம் நீங்கப்பெற்றன (எ - று.)

மன்றேபுகழுந்திருவழுந்தூர்வள்ளன்மாறனைமுன்
சென்றேமதுரகவிப்பெருமாடென்றமிழ்த்
தொடையி
லொன்றேபதிகமுரைத்தவன்பொன்னடியுற்று
நின்ரு
னென்றேபதிகம்பதிகமதாகவிசத்தனனே.

(இ - ள்) மன்றே புகழும் - எச்சபையாராலும் புகழப்படு கிற, திருஅழுந்தூர் - வள்ளல் - திருவழுந்தூரில் அவ தரித்த உதாரியாகிய கம்பநாட்டாழ்வார்,—'முன் - முற்காலத் தில், மதுரகவி பெருமாள் - மதுரகவியாழ்வார், மாறனை - நம் மாழ்வாரை, சென்று போய் அடைந்து. தென் தமிழ் தொடை யில் - அழகிய தமிழ்ப்பாமாலை கொண்டு. ஒன்றே பதிகம் உரைத்து - ('கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்னும்) ஒருபதிகத் தையே பாடி அவன் பொன் அடி உற்று, நின்ருன் - அவ்வாழ்வ ருடைய திருவடிகளைச்சேர்ந்து வாழ்ந்தனர்,' என்றே - என்று உட்கொண்டு, பதிகம் பத்துள்ளதாக [நூறுபாடல்களாக] (இவ் வந்தாதியை அந்த நம்மாழ்வார்விஷயமாகப்) பாடினர்; (எ-று)

குலசேகரத்தாழ்வாரை 'குலசேகரப்பெருமாள்' என்ருற் போல, மதுரகவியாழ்வாரை 'மதுரகவிப்பெருமாள்' என்ருர்; இராமநுச நூற்றந்தாதியில். திருப்பாணாழ்வாரை "பாண்பெரு மாள்" என்பதுங் காண்க. பெருமான்பக்கல் கொண்ட பக்தி மிகுதியா லாகிய ஈடுபாட்டினுல் அப்பெருமான்மயமாகுதலால், ஆழ்வார்கள் 'பெருமாள்' எனப்படுவர் மதுரகவியாழ்வார் - பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவர்; "தேவு மற்றறியேன் குரு கூர்நம்பி, பாவினின்னிசை பாடித்திரிவனே" என்று நம்மாழ்

வார்க்கே தொண்டு பூண்டொழுகியவர். முன்பு-கலியுகத்தொடக்கத்தில், பாண்டியநாட்டில் திருக்குருகூர்க்கு அருகிலுள்ள திருக்கோளூரிலே நம்மாழ்வார்க்குமுன்னமே உதித்துச் செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாடவல்லாரானதனால் மதுரகவியென்று திருநாமம் பெற்ற மெய்யடியவர், திவ்வியதேசயாத்திரையாய் உத்தரதேசஞ் சென்று திருவயோத்தியி லிருந்தபோது தென்திசையில் திவ்வியமானதொரு பேரொளிபிழம்பைக் கண்ணுற்று வியந்து அதனை இன்னதென்று அறியுமாறு குறிக்கொண்டு மீண்டும் ஆர்வார்திருநகரியையடைந்து அப்பெருஞ்சோதி அங்கு அவதரித்துள்ள நம்மாழ்வாரது திருமேனிவிளக்கமேயென்று அறிந்து அவர்க்கு ஆட்பட்டு, 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற திவ்வியப்பிரபந்தம் பாடினரென்பது தோன்ற, 'சென்று' எனப்பட்டது. இங்ஙனம் அவர் நம்மாழ்வார்க்குத்திருவடித் தொண்டராய் ஒழுகி அவரது சீர்பாதத்திற் சேர்ந்தனராதலால், அந்நம்மாழ்வாரது திருவடிநிலை 'மதுரகவிகள்' என இவர்திருநாமத்தையிட்டு வழங்கப்பெறும் பத்துச்செய்யுள் கொண்டது. பதிகமெனப்படும் திருநாமப்பாட்டு நீங்கலாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பத்துச்செய்யுளுடையது.





ஸ்ரீ

# பாசுரப்படி பாகவதம்

## த்ராப்தி வைபவம்

பாலாலிலையில் துயில் கொண்ட பரமன்
மன்னிய நாகத்தணை மேலோர் மாமலைபோல்
சுடராழி சங்கிருபால் பொலிந்து தோன்றத்
திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந் திகழ

5. ஆயிரந்தோள் பரப்பி முடியாயிர மின்னிலகக்
கடலோதம் கால் அலைப்பக்
கடலோன் கைமிசைக் கண் வளர்வது போல்
உன்னிய யோகத்துறக்கம் தலைக்கொண்டு
இலைாயில்லா இன்னிசையாழ் கெழுமி இன்பத்

10. தும்புருவும் நாரதனு மிறைஞ்சி யேத்தக்
கொந்தலர்ந்த நறுந்துழாய் சாந்தம் தூபம்
தீபங் கொண்டமரர் தொழப்
பக்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்
[முனிவர்களும்
சித்தர்களும் தொழுதிறைஞ்ச

15. அருள் கொண்டாடும் அடியவரின்புற
ஏழுலகுந் தனிக்கோல் செல்ல வீற்றிருந்து,

## அவதார காரணம்

விண்கொள் அமரர்கள் வேதனை தீர
மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யப்
பாரேறு பெரும் பாரந்தீரத்

20. துவரிக்கனிவாய் நிலமங்கை துயர்தீர
மண்ணின் பாரம் நீக்குதற்கே
வேண்டித் தேவரிரக்கச்
சாது சனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு
என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் [பெற்ற
[வயிறுடையா ளென்னும் வார்த்தை யெய்து விக்கத்]

25. தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ
மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்த
தாயைக்குட்டல் விளக்கம் செய்யக்

## அவதாரம்

கதிராயிர மிரவி கலந்தெரித்தா லொத்து
மல்லை மூதூர் வடமதுரையில்

30 முத்தக்களிற்று வசுதேவர் தம்முடைச்
சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில்
அத்தத்தின் பத்தாநாள் தோன்றிக்
கஞ்சன் வலைவைத்தவன்று காரிருள் எல்லிற் [பிழைத்து
எடுத்த பேராளன் நந்த கோபன்றனின் னுயிர்ச் [சிறுவ னொன்னக்

35. கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் [குமரனாய்த்
தெய்வ நங்கை யசோதைக்குப்
போத்தந்த பேதைக் குழவியாய்ப்
பலதேவற் கோர் கீழ்க்கன்றாய்
ஆயர்கள் நாயகனாய்

40. ஆயர்பாடிக்கு அணிவிளக்காய்க்
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்துக்குங் [கொழுந்தாய்க்
காண்டலின்றிக்
கொண்டு வளர்க்கக் குழவியாய்த்தான் வளர்ந்து

## ஆயர்ப்பாடியில் மங்களங் கொண்டாடல்

எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடப்

45. பாடுவார்களும் பல்பறை கொட்ட
அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாட
அயலிடத்துப் போர்ந்து,
தத்துக் கொண்டாள் கொலோ! தானே பெற்றாள்
சித்த மனையாள் அசோதை யென்னப் [கொலோ!

50. பேணிச்சீருடைப் பிள்ளை
ஒருத்தி மகனா யொளித்து வளரத்,

### பூதனை வதம்

தீமனத்தான் கஞ்சனது வஞ்சனையில் திரியும்
பெண்மை மிகு வடிவு கொடு
வன்பேய்ச்சி தன் மகனாகத்தான் முலையுண்ணக்
[கொடுக்க

55. முலையுண்பான் போலே முனிந்துண்டு
வஞ்சனத்து வந்த பேய்ச்சி யாவி பாலுள்வாங்கிச்
சூருருவின் பேயளவு கண்டு,

### சகட பங்கம்

மாணிக்கங் கட்டி வயிர மிடை கட்டி
ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச்
[சிறுதொட்டிலில்

60. உறங்குவான் போலே கிடந்து
நாள்களோர் நாலைந்து திங்களளவிலே
தாளை நிமிர்த்து
உருளும் சகட முதைத்து,

### கண்ணனுக்கு நாமகரணஞ் செய்தல்

— ஆய்ப் பாடியாயர்

65. பத்து நாளுங் கடந்த விரண்டா நாள்
எத்திசையும் சயமரங் கோடித்துக்
கருவடிவிற் செங்கண்ண வண்ணன்றன்னை

வேதம் வல்லார்களைக் கொண்டு
கார்முகிலே! யென் கண்ணா!

70. செங்கணெடுமால் சிரீதரா வென்றழைத்து
நாவினால் நவிற்றின்ப மெய்த,—

## பால லீலைகள்

மாயக் கூத்தன்
தன் முகத்துச்சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்து [போய்ப்
பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைந்து.

75. கோல நறும் பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளி முளைப்போல் சில பல்லிலகக்
கணகண சிரித்து வந்து முன் வந்து
நின்று முத்தந்தந்து
ஆயர்கள் போரேறாய்ச் செங்கீரையாடி.

80. எண்ணெய்க் குடத்தை யுருட்டி இளம்பிள்ளை [கிள்ளி யெழுப்பிக்
கண்ணைப்புரட்டி விழித்துக் கழைகண்டு செய்து,
வெண்ணெய் விழுங்கி விரைய வுறங்கி,
பாலையிற் பாலைப் பருகிப் பற்றாதாரெல்லாஞ் [சிரிப்ப
மடங்கொள் மதிமுகத்தாரை மால் செய்து,

85 அழகிய வாயிலமுத ஊறல் தெளிவுறா
மழலை முற்றாத இளஞ்சொல்லால்
வானிலா வம்புலீ! சந்திரா! வாவென்று
அம்புலி விளித்து.

## யசோதை, பிள்ளைவாயுள் வையமேழுங் கண்டது

மண்ணும் மலையும் கடலும் உலகேழும்

90. உண்ணுந் திறத்து மகிழ்ந்து,
கையுங் காலும் நிமிர்த்துக் கடார நீர்
பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்

ஐய நாள்வழித்தாளுக்கு அங்காந்திட
வாயுள் வையமேழுங் காண

95. ஆடியாடி யசைந்தசைந்திட்டு அதனுக் கேற்ற
[கூத்தையாடி,

## யசோதை கண்ணனை உரலிற் கட்டுதல்

வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளில் பெரும்
[பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைக்க,
வெள்ளிமலை யிருந்தாலொத்த வெண்ணெயைத்
தாயர் மனங்கள் தடிப்ப

100. உளங்குளிர வமுது செய்து,
விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு
ஒளியா வெண்ணெ யுண்டானென்று உரலோடு
[ஆய்ச்சி ஒண்கயிற்றுல்
விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மியழுது,
பொத்த வுரலைக் கவிழ்த்து அதன்மேலேறித்

105. தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மொத்தத் திருவயிறு ஆர விழுங்கி,
சீரால் அசோதை
அன்புற்று நோக்கி யடித்தும் பிடித்தும்
[அனைவர்க்கும் காட்ட
ஊரார்க ளெல்லாருங் காணக்

110. கண்ணிநுண் சிறுத்தாம்பினுல் கட்டுண்டு
பெருமா வுரலில் பிணிப்புண்டிருந்து
விண்ணெல்லாங் கேட்க வழுது
எழில்கொள் தாம்பு கொண்டாடிப்பதற்கு எள்கி,

## மருத மரங்களை முறித்தது

மணமருவு தோளாய்ச்சி ஆர்க்கப் போய்
[உரலோடும்

115. ஒருங்கொத்த இணைமருதம் உன்னிய வந்தவரை
ஊருகரத்தினொடும் உந்தி
எண்டிசையோரும் வணங்க
இணை மருதூடு நடந்திட்டு,

### யாடு கன்றுகளை மேய்த்தல்

அழகிய பைம் பொன்னின் கோல் அங்கைக்
[கொண்டு

120. கழல்கள் சதங்கைகை கலந்தெங்கும் ஆர்ப்ப
மழகன் றினங்கள் மறித்துத் திரிந்து,
புகழ்ப் பலதேவனென்னும் தன்நம்பி யோடப்
[பின் கூடச் சென்று,
தன்நேர் ஆயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு,
வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்
[பிடையிட்டு அதனோசை கேட்டு,

125. அசல் அகத்தார் பரிபவம் பேச
இல்லம் புகுந்தவர் மகளைக் கூவிக் கையில்
[வளையைக் கழற்றிக் கொண்டு
கொல்லையினின்றுங் கொணர்ந்து விற்ற
[அங்கொருத்திக்கு அவ்வளை கொடுத்து
நல்லன நாவற் பழங்கள் கொண்டு,
கறவைகள் பின் சென்று கானஞ்சேர்ந்துண்டு

130. இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி
வட்டுக்கொண்டு விளையாடி,
கணங்களோடு மின்மேகங் கலந்தாற் போல்
மினுங்க நின்று விளையாடி, [வனமாலை
கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதிக்

135. கோவிந்தன் வருகிற கூட்டங் கண்டு
மழை கொலோ வருகின்றதென்று சொல்லி
[மங்கைமார் சாலக வாசல் பற்றி
[நுழைய குழல்களுங் கீதமுமாகி
முற்றத்தூடு புகுந்து தன்முகங் காட்டிப் புன்
[முறுவல் செய்து

பஞ்சிய மெல்லடிப் பிள்ளைகளுடன்
வைத்த நெய்யுங் காய்ந்த பாலும் வடிதயிரும் நறு
[வெண்ணெயு மித்தனையும் பெற்றறியாமே

140. ஆயிரநாழி நெய்யைப் பாகந்தான்
வையாதுதுண்டு,

### வத்ஸாஸுர பகாஸுர வதம்

கானக வல்விளவின் காயுதிரக் கருதிக்
கன்றது கொண்டெறிந்து,
பள்ளத்தில் மேயும் பறவையுருக் கொண்டு

145. கள்ளவசுரன் வருவானைத்தான் கண்டு
புள்ளிதுவென்று பொதுக்கோ வாய் கீண்டிட்டு,

### தேனுகாஸுர வதம்

வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்
நாசமாகி நாளுலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு
வீசி மேல் நிமிர்ந்த தோளில்லையாக்கி,

### காளிய நர்த்தனம்

150. ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிடப்
பூத்த நீள் கடம்பேறித்
தடம்படு தாமரைப் பொய்கை கலக்கி
விடம்படு நாகத்தை வால்பற்றி யீர்த்துப்
படம்படு பைந்தலை மேலெழப் பாய்ந்திட்டு

155. உடம்பை யசைத்து
வேயின் குழலூதி வித்தகனாய் நின்று
நீண்முடி யைந்திலும் நின்று நடஞ்செய்து,

### பிரலம்ப வதம்

பாண்டி வடத்தில்
பிலம்பன்றன்னைப் பண்ணழியப் பலதேவன்
[வெல

## கண்ணன் காட்டுத் தீயை விழுங்கல்

160. நின்ற செந்தீமொண்டு சூறை நீள்விசும்பூடு
[இரியக்
காண்கின்ற வெந்தீயெல்லாம் யானே யன்று
தான் விழுங்கி யுய்யக் கொண்டு,

## கண்ணன் வேணுகானஞ் செய்தல்

வள்ளி நுடங்கிடை மாதர் வந்தலர் தூற்றிடத்
துள்ளி விளையாடித் தோழரோடு

165. கானகம்படி யுலாவி யுலாவிச்
சிறு விரல்கள் தடவிப் பரிமாறச் செங்கண்
[கோடச் செய்வாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவலர் சிறுமிய ரிளங்கொங்கை குதுகலிப்பு
மேனகையோடு திறோத்தமை யரம்பை
[உருப்பசியரவர் வெள்கி மயங்கி

170. நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம்
[வீணை மறப்பப்
பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து
[சூழ்ந்து படு காடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
[கவிழ்ந்திறங்க
மருண்ட மான்கணங்கள் மேய்கை மறந்து
[மேய்ந்த புல்லுங்கடைவாய் வழிசேர
இரண்டு பாடும் துலங்காப் புடை பெயர

175. எழுது சித்திரங்கள் போல நிற்க
மரங்கள் நின்று மதுதாரைகள் பாய
மலர்கள் வீழ வளர் கொம்புகள் தாழக்
கோவிந்தனுடைய கோமள வாயில்
குழல் முழைஞ்சுகளினூடு குமிழ்த்துக்

180. கொழித்திழிந்த அமுதப்புனல் தன்னை
குழல் முழவம் விளம்பக் கோவனுய்க்
[குழலூதியூதி.

### கோபியர் வஸ்திராபஹரணம்

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில்
கோழி யழைப்பதன் முன்னம் குடைந்து
[நீராடுவான் போந்த
பங்கய நீர் குடைந்தாடுகின்றார்கள் ஆயர்
[மடமக்களைப் பின்னே சென்றொளித்திருந்து

185. அங்கவர் பூந்துகில் வாரிக் கொண்டிட்டு
[அரவேரிடை யார் இரப்ப
மங்கை நல்லீர் வந்து கொண்மினென்று மரமேறி
[யிருந்து
கன்னியரோடு எங்கள் நம்பி கரிய பிரான்
[விளையாடி,

### வேள்வி மங்கையர் போக்கியான்னம் சமர்ப்பித்தது

பத்த விலோசனத்தில்
வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடி
[சிலுண்டு

### கோவர்த்தனத்தைக் குடையாக எடுத்து

190. இந்திரனுக் கென்று ஆயர்களெடுத்த எழில்
[விழவில் பழ நடை செய்
மந்திர விதியில் பூசனை பெறாது
இமயப் பெருமலை போல்
அமைத்த சோறது வெல்லாம்
போயிருந்தங் கொரு பூதவடிவு கொண்டு

195. முற்ற வாரி வளைத்துண்ண,
மேலை யமரர்பதி மிக்கு வெகுண்டுவர
காளநன் மேகமவை கல்லொடு கார்பொழிய
வண்ணமால் வரையே குடையாகச்
செந்தாமரைக்கை விரலைந்தினையும்

200. கப்பாக மடுத்து மணி நெடுந்தோள்
காம்பாகக் கொடுத்துக்

கல்லெடுத்துக் கன்மாரி காத்து

### கண்ணன் கோபியரோடு விளையாடல்

மங்கல நல் வனமாலை மார்வில் இலங்க மயில்
[தழைப்பீலி சூடிப்
பொங்கிளவாடை யரையிற் சாத்திப் பூங்
[கொத்துக் காதிற் புணரப் பெய்து

205. கொங்கு நறுங்குழலார்களோடு குழைந்து குழலினி
கொல்லைமை செய்து குரவை பிணைந்து [தூதி
சுழலக் குடங்கள் தலை மீதெடுத்துக் கொண்டாடி,
மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்து
தேனும் பாலுங் கன்னலும் அமுதாகித் தித்தித்து,

210. முற்ற இளையார் விளையாட்டொடு
காதல் வெள்ளம் விளைவித்து

### கேசி வதம்

மாவாயின் அங்கம் மதியாது கீறி,

### கண்ணனும் பலராமனும் மதுரைக்கு எழுந்தருளல்

வில்லார் விழவில் வடமதுரை விரும்பி

### கூனியினுடைய கூனலை நிமிர்த்தல்

நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத்

215. தேறி அவளும் திருவுடம்பில் பூச
ஊறிய கூனினை உள்ளொடுங்க அன்று ஏற வுருவி,

### குவலயாபீட வதம்

விற்பிடித்திறுத்து
வளவெழுந் தவளமாட மதுரைமா நகரந் தன்னுள்
வெம்பு சினத்து அடல் வேழம் வீழ

220. வெண் மருப்பு ஒன்று பறித்து,

### மல்லர் வதம்

இருமலை போல் எதிர்ந்த மல்லர் இருவர்

வலிய முடியிடிய வாங்கி

### கம்ஸ வதம்

செம்பொனிலங்கு வலங்கை வாளி
திண்சிலை தண்டொடு சங்க மொள்வாள்

225. உம்பரிரு சுடரொழியோடு
கேடக மொண்மலர் பற்றித்
தொட்ட படை யெட்டும் தோலாத வென்றியான்
கறுத்திட்டெதிர் நின்ற
கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்று

230. அரையனை எழப் பாய்ந்துதைத்துக்
குஞ்சி பிடித்தடித்து
உயிரது வுண்டு
அவன் மாளக் கண்டு,

### சாந்தீபினியின் புத்திரனை மீட்டுக்கொடுத்தது

மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய்
[மாண்டானை

235. ஓதுவித்த தக்கணையா ருவுருவே கொடுத்து,

### ருக்மிணி பரிணயம்

கண்ணலங் கோடித்துக் கன்னி தன்னைக் கைப்
[பிடிப்பான்
திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து
அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்து
உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு

240. விருப்புற்று அங்கே விரைந் தெதிர்வந்து
செருக்குற்றான் வீரம் சிதையத் தலையைச் சிரைத்து
அன்று அந்த அமர் வென்று நங்கையணி
[நெடுந்தோள் புணர்ந்து
ஏடிலங்கு தாமரை போற் செவ்வாய் முறுவல்
[செய்தருளித்
திருவுக்கும் திருவாகிய செல்வனைப்

245. பெண்ணமுதுண்டு

**ஏழ்விடை செற்றுப் பின்னையை மணந்தது**

துப்புடையாயர்கள் தம் சொல் வழுவாதொரு கால்
தூயகருங் குழல் நல்தோகை மயிலனைய
நப்பினை தன் திறமா நல்விடை யேழவிய
வீயப் பொருது வியர்த்து நின்று,

**நரகாசுர வதம்**

250. மன்னு நரகன் தன்னைச் சூழ்போகி வளைத்
கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்து [தெறிந்து

**துவாரகை ஏற்படுத்தியது**

பதினாறும் ஆயிரவர் தேவிமார் பணிசெய்யத்
[துவரை யென்னும்
அதில் நாயகராகி வீற்றிருந்து,

**பாரிஜாதாபஹரணம்**

என்னுதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்

255. தன்னுதன் காணவே தண்பூ மரத்தினை
வல்நாதப் புள்ளால் வலியப் பறித்துக்
கற்பகக்காவு கருதிய காதலிக்கு
இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில்
நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துள்

260 உய்த்து,

**வாணனுயிரத் தோள் துணித்தது**

மாவலி தன்னுடைய மகன்வாணன் மகளிருந்த
காவலைக் கட்டழித்துப்
பரிவின்றி வாணனைக் காத்துமென்று அன்று
[படையொடும் வந்தெதிர்ந்த
திரிபுரஞ் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும்
[போர் தொலையப்

265. பொரு சிறைப்புள்ளைக் கடாவிப்
பொருகடலை யரண் கடந்து புக்கு
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்தோளும்
[பொழிகுருதி
பாய ஆழி சுழற்றி,

### பௌண்ட்ரக வாசுதேவ பங்கம்

புகராருருவாகி முனிந்தவனைப் புகழ்வீட முனிந்து
[உயிருண்டு அசுரன்

270. நகராயின பாழ்பட நாம மெறிந்து
காய் சினத்த காசி மன்னன்
நாச முற்று வீழ நாள் கவர்ந்து,

### சிசுபால வதம்

கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்
சேட்பாற் பழம் பகைவன் சிசுபாலன் திருவடி
[தாட் பாலடையப்

275. பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் தாளிணைக்கீழ்ச்
[சேர்த்துப்

### தந்த வக்கரனை முடித்தல்

பொங்கரவ வக்கரனைக் கொன்று,

### திரௌபதி கண்ணனைச் சரணமடைதல்

அந்தகன்சிறுவன் அரசர்தமரசற் கிளையவன்
[அணியிழையைச் சென்று
"எந்தமக்கு ரிமை செய்" எனத்தரியாது
["எம் பெருமாள்! அருள்" என்ன

### கண்ணன் விச்வ ரூபமெடுத்தது

பங்கயக் கண்ணன்

280. ஒன்றே யுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்
துன்று முடியான் துரியோதனன் பக்கல் சென்று,
கோதை வேல் ஐவர்க்காய் மண்ணகலம்
[கூறிடுவான்

தூதனாய் மன்னவனூற் சொல்லுண்டு,
அரவு நீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை
[யஞ்சிடாதேயிட அதற்குப்

285. பெரிய மாமேனி யண்டம் ஊடுருவப் பெருந்துசை
[யடங்கிட நிமிர்ந்து,
ஊரொன்று வேண்டிப் பெருத வுரோடத்தால்
மண்மிசைப் பெரும்பாரம் நீங்கவோர் பாரதமாப்
[பெரும்போரில்

**பார்த்தன் தேரில் கண்ணன் பாகனாய் நின்றது**

பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு
[பார்த்தன் தன் தேர்முன் நின்று

**அர்ச்சுனன், கண்ணனது சேவடிமேல் அர்ச்சித்த பூவைச் சிவபிரான் முடியிற் கண்டது**

தீர்த்தனுலகளந்த சேவடி மேற் பூந்தாமம்

290. சேர்த்தி அவையே சிவன் முடி மேல் தான் கண்டு
பார்த்தன் தெளிந்தொழிய

**கீதை யுபதேசம்**

அறிவினார் குறைவில்லா அகன்ஞாலத் தவரறிய
நெறியில்லா மெடுத்துரைத்து
நீர்மையில் நூற்றுவர்வீய ஐவர்க்கருள் செய்து
[நின்று

**ஜயத்ரதனை மடித்தது**

295. ஆழி கொண்டன்று இரவி மறைப்பச் சயத்திரதன்
[தலையைப்
பாழிலுருளப் படைபொருது,

**பரிக்ஷித்தை உயிர் மீட்டருளியது**

மருமகன் தன் சந்ததியை உயிர்மீட்டு
[மைத்துனன்மார்
உருமகத்தே வீழாமே குருமுகமாய்க் காத்து,

எல்லாச் சேனையும் இரு நிலத்து அவித்து

300 சந்தம் அல்குழலாள் அலக்கண் நூற்றுவர் தம்
[பெண்டிருமெய்தி நூழிழப்ப,
மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பித்து
[அவர்களையே மன்னராக்கி,

**வைதிகன் பிள்ளைகளை மீட்டுக் கொடுத்தல்**

வேதவாய் மொழி யந்தணன் ஒருவன்
["எந்தை நின் சரண் என்னுடை மனைவி
காதல் மக்களைப் பயத்தலும் காணாள் கடிய தெய்
[வங் கொண்டொளிக்கும்'' என்றழைப்ப,
இடரின்றியே ஒருநாள் ஒரு போழ்தில் எல்லா
[வுலகுங் கழியப்

305. படர்புழ்ப் பார்த்தனனுங் வைதிகனும் உடனேறத்
[திண்தேர் கடவிச்
சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில்
[வைதீகன் பிள்ளைகளை
உடலொடுங் கொண்டு கொடுத்து,

**ஆதியஞ் சோதி யுருச் சேர்தல்**

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி நின்ற
[வண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக்
[கண்காண வந்து

310. துயரங்கள் செய்து தன் தெய்வ நிலையுலகிற்
[புகவுய்த்துக்
கதையின் திருமொழியாய் நின்று
நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்ப்
பல் வகையும் பரந்து

315. வைகுந்தம் புகுதலும்.
என்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர்
வண்ண மலரேந்தி வைகலும் நண்ணி
ஒரு மாலையால் பரவி ஓவாது எப்போதும்
மால்வண்ணன் தாள் தாமரை யடைவோமென்று

320. மறை கொண்ட மந்திரத்தால் வாழ்த்திச்
சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி
ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ்குழல் முழுவமோடு இசை திசை கெழுமிக்
கீதங்கள் பாடி மயங்கித் திருவடி தொழ,

325. பாடு நல் வேதவொலி பரவைத்திரை போல்
[முழங்க,
ஆயிரம் பெயரால் அமரர் சென்றிறைஞ்ச,
உவந்த உள்ளத்தனாய்
அண்டமாய் எண்டிசைக்கும் ஆதியாய் நீதியான
பண்டமாம் பரம சோதியாய்

330. ஆடரவமளியில் அறிதுயிலமர,
இடங்கொள் சமயத்தை யெல்லாம் எடுத்துக்
[களைவன போலே
தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப்
[பூதங்களேயாய்க்
கிடந்து மிருந்தும் எழுந்தும் கீதம் பல பல பாடி
நடந்தும் பறந்தும் குனித்தும் நாடகம்
[செய்கின்றனவே.

---

தோட்டலர் பைந்தார்ச் சுடர்முடியானைத்
தொழுது நன்மொழியால் தொகுத்துரைத்த
பாட்டிவை பாடப் பத்திமை பெருகிச்
சித்தமும் திருவொடு மிகுமே.

பொலிக பொலிக பொலிக!



# தூத்துக்குடி நகர் சரித்திரம்.

சென்னை மகாணத் தமிழ்ச் சங்கத்தின் வழியாக அறநிலையத்துறை, தமிழ்நாடு அரசாங்கம் 1962-ல் பதிப்பித்த புத்தகத்தில் இருந்து எடுக்கப்பட்டது.

# தூத்துக்குடி நகர்

தூத்துக்குடி திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நகராட்சி, பெரிய துறைமுகம். ஆதலின் இவ்வூர் தோன்றி வளர்ந்த வரலாற்றை விவரமாக ஆராய்வோம்.

திருநெல்வேலி மாவட்டம் சீவைகுண்டம் வட்டத்தில் கடற்கரையிலுள்ள மிகப்பெரிய துறைமுகப்பட்டினம். தூத்துக்குடி, இது தென்னிந்திய புகைவண்டித் தொடரின் முடிவிடம். இது சென்னையிலிருந்து 405 மைல் தூரத்தில் இருக்கிறது அல்லாமலும் இந்நகர் தென் திசையிலுள்ள பெரிய நகரங்களோடு மிக நல்ல சாலைகளாலே இணைக்கப்பெற்றுள்ளது. குறுக்குச்சாலை எட்டையாபுரம் வழியாகக் கோவில்பட்டி, மதுரை, சங்கரநாயனூர் கோவில்; குறுக்குச்சாலை ஓட்டப்பிடாரம் வழியாக மணியாச்சி, திருநெல்வேலி குறுக்குச்சாலை, குளத்தூர் வழியாக விளாத்திகுளம், நாகலாபுரம்; குறுக்குச்சாலை எட்டையாபுரம் வழியாக அருப்புக்கோட்டை, மதுரை, (குறுக்குச் சாலை என்ற பெயர் எவ்வளவு பொருத்தம் பாருங்கள்) வாகைக்குளம், முரப்பநாடு, வல்லன்நாடு வழியாகத் திருநெல்வேலி, வாகைக்குளம் சீவைகுண்டம் வழியாகத் திருநெல்வேலி, திருச்செந்தூருக்குக் கற்சாலைகள் இருத்தலினாலே இவ்வூர்களுக்கு வாடகை உந்துவண்டிகள் அடிக்கடி ஓடிக்கொண்டிருக்கின்றன. இவ்வூரிலிருந்து மேற்கே பத்தொன்பதாவது மைலில் மணியாச்சிப் புகைவண்டி நிலையம் இருக்கிறது அதிலிருந்து வடக்கே சென்னைக்கும் தென்மேற்கே திருநெல்வேலி வழியாகத் தென்காசி, கொல்லம், திருவனந்தபுரத்திற்கும் திருச்செந்தூர் முதலிய ஊர்களுக்கு நாள்தோறும் பலமுறை புகைவண்டிகள் போய் வருகின்றன உலகத்திலேயே மிகச் சிறந்த துறைமுகங்களில் ஒன்றாகிய கொழும்புக்கும், இவ்வூருக்கும் அடிக்கடி கப்பல்கள்

வந்து போய்க்கொண்டிருக்கிறபடியால் உலகத்தில் எப் பகுதிக்கும் கப்பல் வழியாகப் போகும் வாய்ப்பும், அரும் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்யும் வாய்ப்பும் இந்நகருக்கும் இயல்பாகவே அமைந்துள்ளன.

இந்நகர் மேலூர், கீழூர் என இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. துறைமுகம் கடற்கரைப் பகுதியும் கீழூர் எனப்படும். பெரும்பகுதியான மக்கள் குடியிருக்கும் இடம் மேலூர். கீழூரிலேதான் பெரிய புகைவண்டி நிலையம் இருக்கிறது இதிலிருந்து திருக்கோவில் மேற்கே அரை மைல் தூரத்திலிருக்கிறது புகைவண்டி நிலையத்தில் எப்போதும் வாடகைக்கு குதிரை வண்டிகள் கிடைக்கும். மேலூரிலும் சிறு புகை வண்டி நிலையம் இருக்கிறது. அதிலிருந்து கோவில் உ பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது.

கி பி 1700-ல் இவ்வூர் இருந்த நிலையைப்பற்றி மார்ட்டின் பாதிரியார் பின்வருமாறு எழுதுகிறார்:— "கப்பலிலிருந்து பார்த்தால் தூத்துக்குடி மிகவும் அழகான நகரமாகக் காணப்படுகிறது. கடற்கரையில் பல அகலமான பண்டகசாலைகள் அருமையாகவும், அழகாகவும் தோன்றுகின்றன ஆனால் கரையில் இறங்கியவுடன் இந்த அழகெல்லாம் மறைந்து விடுகிறது. மாட்டுத் தொழுவங்களினாலாகிய நகரே புலனாகிறது" — இந்த மாட்டுத் தொழுவங்கள் இன்றும் ஒன்றிரண்டு அங்குமிங்குமாக இருக்கின்றன. ஆனால் இப்போது பெரிய பெரிய காரைச் சுவர்களினாலாகிய கட்டிடங்களாக அவை மாறிவிட்டன. தொழுவங்களுக்குரிய கூரைகள் ஓடுகளாக மாறிவிட்டன. இன்றும் கடற்கரையிலிருக்கிற தெருக்களும், முடுக்குகளும், ஒடுக்கமானவைகளாகவும், கோணலாகவுமே இருக்கின்றன. பெரிய பருத்திச் சாலையே இந்நகரின் பெருந்தெரு. இது நேராகவும் மற்ற ஊர்களிலுள்ளவைகளைக் காட்டிலும் அகலமான

தாகவும் இருக்கிறது. அப்படி இருந்தாலும் இதன் வழி யாகப் போய்வரும் கூட்டம் இடைஞ்சற்படுகிறது. பருத்தி பஞ்சு வண்டிகள் ஏராளமாக அவ்வழியே வந்து கொண்டிருப்பதனாலேதான் இது "பெரிய பருத்திச் சாலை" என அழைக்கப்படுகிறது.

கடற்கரையில் ஒரு மைல் நீளத்திற்கு அழகும், உறுதியும், உயரமும் பெருமையும் உள்ள கட்டிடங்கள், வேலை நிலையங்கள், மாளிகைகள் அணியணியாக விளங்குகின்றன. அன்று 1700-ல் கப்பலில் வந்து கொண்டிருந்த மார்ட்டின் பாதிரியார் இன்று இத்துறை முகத்தின் காட்சியைக் காணுதல் வேண்டும்! கடற்கரைச் சாலையும், புகைவண்டி நிலையப் பக்கமும்தான் இவ் ஊரின் மொத்த வியாபரத்திற்கெல்லாம் நடு இடமாக உள்ளன. பெரிய பருத்திச்சாலை வீதியில் முதன்மை யான கடைகளெல்லாம் அடங்கியிருக்கின்றன. புகை வண்டி நிலையத்திற்கு வடக்கே பலவகையான மக்கள் கூட்டங்கள் வாழ்கின்றன. இதனுள்தான் வாடித்தெரு இருக்கிறது. இது தான் இங்கே மக்கள் தங்கிய மிகப் பழமையான இடம். (வாடி - வேலி) தெற்கே பரவர்கள் மிகுதியாக வாழ்கின்றார்கள். ஊரின் வடக்கே முன் ஆளுநராக இருந்த பக்கிள் துரையால் வெட்டப்பட்ட பக்கிள் கால்வாயும், அதற்கப்பால் மணல் திரடுகளும் உள்ளபடியால் நகரம் அப்பக்கமாக விரிவதற்கு வசதி இல்லை. தெற்கே நீர்ப்பிடிப்பான பகுதி. கிழக்கிலோ கடலாயிற்று. மேற்கில் இடமிருந்தாலும் வியாபாரத் துறைக்குத் தள்ளிப்போவதால் மக்களுக்குக் கவர்ச்சி யில்லாமல் இருக்கிறது. இருந்தாலும் இப்போது துணை நீதிமன்றங்கள், ஊருக்கு மேற்கே கட்டப்பெற்று விட்டபடியாலும், வேறு போக்கில்லாமையாலும் மேற்குத் திசையே இவ்வூருக்கு வளர்ச்சிக்குரிய இடமாக இருக் கிறது. பெரிய வைத்தியசாலை ஒன்றும் அரசாங்கத் தாரால் இங்கேயே அமைக்கப்பெற்றுள்ளது. மேலும்

வ. உ. சிதம்பரநகர் என்பது இப்போது ஒரு பெரிய நகரமாக மேற்கே வளர்ந்துவிட்டது. அதில் வ உ. சிதம்பரம் பிள்ளை கலைக் கல்லூரியும், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும் நிலைபெற்றுவிட்டன

இவ்வூருக்கு அண்மையில் மலைகள் ஒன்றும் இல்லை எங்கு பார்த்தாலும் முட்செடிகளும், பனை மரங்களும் செறிந்த மணற்பரப்புமே உள்ளன. இதற்குத் தெற்கே ஒருமைல் தூரத்தில் உப்பு ஓடை கடலில் விழுகிறது. இது ஓட்டப்பிடாரத்திற்கு மேற்கே தோன்றிப் பல இடங்களிலுள்ள நீரை அள்ளிக்கொண்டு கோரம் பள்ளம் என்ற குளத்தின் வழியாகக் கடலை அடைகிறது. கோவிலின் வடகிழக்கில் ஒரு சிறு குளம் இருக்கிறது. இதில் வெளியிலிருந்து கோரிக்கொண்டு போகப்படுறது ஊருக்கு வடக்கே முன் கூறிய பக்கிள் ஓடை ஓடுகிறது.

தண்ணீருக்கு இவ்வூரார் பட்டபாடு சொல்லுந் தரத்தன்று. தூத்துக்குடி என்ற திருப்பெயரே இதற்குப் போதுமான ஆதாரமாகும். கிணறுகள் எல்லாம் விரைவில் தூர்ந்து போகும் தன்மையான தூத்துத் தூத்துத் தான் தண்ணீர் இறைத்துக்குடிக்க வேண்டியிருந்ததினால் இவ்வூர் தூர்த்துக்குடி என்று பெயர் பெற்று மருவித் தூத்துக்குடியாயிற்று எனச் சிலர் கூறுகின்றனர். உப்பு ஊற்றுக்கள் ஊறாமல் கிணற்றில் தளத்தைக் கெட்டித் தூர்த்துப் பின் அவற்றை நல்ல தண்ணீரால் நிரப்பி வாளியினால் அதனை எடுத்துக் குடித்து வந்ததினாலும் இப்பெயர் வந்ததாகும். 1823-ல் அச்சான சர்வேக் கணக்கின்படி அக்கால ஒரு குடம் குடிதண்ணீர் நான்கு பைசாவாக விற்று வந்ததாம் அண்மையில் பொருநை என்னும் தாமிரபர்ணி ஆற்றிலிருந்து தண்ணீர் வரும் வரை எவ்வளவோ பாடுபட்டும் கோடை காலங்களில் மக்கள் தண்ணீருக்கு மிகவும் தவித்து வந்தார்கள். கிண

றுகள் காய்ந்தோ, பொறுக்க முடியாத உப்பாகவோ போய்விடுமாதலால் பணக்காரர்கள் கொழும்பிலிருந்து குடிதண்ணீர் இறக்குமதி செய்துவந்தார்கள்.

1846-ல் சில ஐரோப்பிய வியாபாரிகள் நல்ல ஊற்றுகளைக் காணும் பொருட்டு வெட்டிப் பார்த்ததில் இருபது அடிகளுக்குக் கீழே வெள்ளைக் களிமண்ணும், அதற்கு கீழே ஐந்தடி வரைக்கும் கரிசல் மண்ணும் மணலும், சரளும் இருபத்தைந்தாவது அடியில் பவளப் பாறையும் காணப்பட்டு இதுவரை உப்பாக இருந்த தண்ணீர் முப்பத்தோராவது அடியில் சிறிது மாறியதாகக் காணப் பெற்றது. வெட்டு நாற்பத்தோரடி வரை நடந்தது அதன் கீழ் நல்ல தண்ணீர் இருக்குமென்பது வெட்டியவர்களுடைய நம்பிக்கை. ஆனால் மேலிருந்த உப்பு நீரைத் தடுத்து அவ்வளவு ஆழத்திற்கு கிணற்றைக் கட்டுவது முடியாததாகத் தோன்றியதால் அச்சோதனை அத்தோடு நின்றது.

அங்ஙனமே 1849-லும் 1851-லும் செய்த முயற்சிகள் பயனற்றவையாயின 1855-ல் மாவட்டப் பொறிவலாளர் ஆர்சிலே சீவைகுண்டத்தில் பெரிய அணை ஒன்று கட்டி வடக்கில் ஒரு கால்வாய் தூத்துக்குடி வரையிலும், தெற்கே ஒன்று திருச்செந்தூர் வரையிலும் குடிதண்ணீருக்கும், நீர்ப்பாசனத்துக்குமாக வெட்டத் திட்டமிட்டார் 1857-ல் இத்திட்டம் மூன்று இலக்கத்து எண்பத்தையாயிரம் ரூபா செலவில் தொடங்கி 1874-ல் முற்றுப்பெற்றது. 1874-ல் பொருநைத் தண்ணீர் கால்வாய் வழியாகக் கோரம் பள்ளம் குளத்தைப் பெருக்கி ஐந்து மைல் நீளம் கால்வாய் வழியாக ஓடிவந்து தூத்துக்குடிக்கு வெளியே கட்டப் பட்டிருந்த தண்ணீர்த் தொட்டியை நிரப்பிக் குழாய் களின் வழியாக ஊருக்குட் சென்று பல கிணறுகளில் விழுந்து ஒருவாறு தண்ணீர் பஞ்சத்தைப் போக்கியது.

1905-ல் ஓரிலக்கம் ரூபா செலவில் கோரம்பள்ளத்தி லிருந்து வந்த வாய்க்கால் கட்டுமானத்தால் மூடு வாய்க் காலாக மாறிற்று என்ன செலவுகள் செய்தும் கோடை காலத்தில் தண்ணீர் தட்டுத் தோன்றிக் கொண்டே இருந்தது.

அதனால் 1914-ல் பதினெட்டு இலக்கத்து இருபத்தையாயிரம் ரூபா செலவில் ஒரு திட்டம் வகுக்கப் பெற்று ஏற்றுக் கொள்ளப்பெற்றது. அதன்படி மருதூர் அணைக்கு இரண்டு மைல் கிழக்கே தள்ளிப் பொருநை ஆற்றிலிருந்து வல்லன்நாட்டுக்குத் தண்ணீர் ஏற்றி அங்கிருந்து பதினெட்டு மைல் இரும்புக் குழாய் வழியா கத் தூத்துக்குடிக்குக் கொண்டுவர வேண்டும் இத் திட்டம் பல சீர்திருத்தங்களோடு முற்றுப் பெற்றது. இப்போது வல்லன் நாட்டுப் பொத்தைப் பக்கத்திலி ருந்து நல்ல தண்ணீர் கொண்டு வரப்பெற்று ஊர் முழுவ தும் எளிதில் கிடைத்து வருகிறது. இதனால் இன்று தூத்துக்குடியில் ஏழை மக்களும் குடிப்பதும், குளிப்பதும் பொருநை என்னும் தாமிரபர்ணி ஆற்றுத் தண்ணீரே.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்"

(திருவள்ளுவர்)

1911-ல் 40185 ஆக இருந்த இவ்வூர் மக்கள் தொகை 1941-ல் ஆண் 38 262+37.352 பெண் ஆக மொத்த 75 614 ஆகிக் கிட்டத்தட்ட இரட்டித்து விளங்குகிறது. இவ்வூர் ஒரு நகராட்சி. இதில் 24 பகுதி களோடு கூடிய 17.953 வீடுகள் இருக்கின்றன இங்ஙன மாக முப்பது ஆண்டுகளில் இரட்டித்துள்ள தொகை இவ்வூர் எவ்வளவு விரைவாக வளர்ந்தோங்கி வருகிற தென்பதைத் தெளிவுபடுத்துகின்றது. இது கொடிய வெப்பமுள்ள ஊராக இருந்தாலும் கடற்கரைப் பட்டின மாதலால் உடலுக்கு நன்மைதரும் கடற்காற்றும், அடிக்

கடி பெய்யும் மழையும் ஏராளமாகக் கிடைக்கும் பொருள் வருவாயும் இப்போது தோன்றியுள்ள தண்ணீர் வசதியும் குடியிருப்பை மிகவும் வசதியாக்குகின்றன சங்கரராமேசு வரர் கோவில் வாசலில் நகராட்சியினருடைய ஆளுகை யிலுள்ள பெரிய சத்திரம் ஒன்று இருக்கிறது. இதனுள் கல் திருமடம் இருக்கிறது. அதன் அமைப்பைப் பார்த் தால் அது ஏதாவது ஒரு சைவ ஆதீனத்தைச் சேர்ந்த தாக இருந்திருக்க வேண்டுமென்பது தோன்றுகிறது. நாட்டாண்மைக் கழகத்தார் ஆட்சியிலுள்ள வழிப்போக் கர் விடுதி (*Travellers Bungalow*) ஒன்று கடற்கரையிலிருக் கிறது.

**துறைமுகம்:**

வியாபார உலகத்தில் தூத்துக்குடி முதன்மைப் பெற்ற வரலாறு ஒரு நூற்றாண்டையது. இவ்வளவு விரைவில் முதன்மை பெற்ற துறைமுகம் இந்தியாவில் பிறிதொன்றுமில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் முற்பகுதியில் ஒருசில நூறு ரூபாய்களுக்கே கடல் வாணி பம் நடந்து வந்தது. அக்காலத்துக் காயற்பட்டினமும், குலசேகரன்பட்டினமும் மிகச் சிறந்து விளங்கின. சென் னைக்குக் கருப்புக்கட்டியும், கொழும்புக்குத் துணியும் ஏற்றிச் சென்று வந்த பதினாறு கப்பல்கள் இந்த மாவட் டத்தில் இருந்தன.

ஆண்டுக்கு மூன்று நான்கு இலட்சம் ரூபா மதிப் புள்ள துணிகள் சென்னைக்குக் காயற்பட்டினத்திலி ருந்து ஏற்றுமதியாயின. கடல் வழிகளில் தூத்துக்குடியும் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப் பெருமையே இதன் காரணம். 1842, 1879, 1912-ஆம் ஆண்டுகளில் இத்துறைமுகம் அளந்து குறியிடப்பெற்றது. 1842-ல் பழைய தச்சுக் காரர்களுடைய சதுரத்தூண் விளக்குக்குப் பதிலாகச் சரியான கலங்கரை விளக்கொன்று ஏற்றப்பெற்றது. இப் போதுள்ள விளக்கு 1874-ல் மாற்றியமைக்கப்பெற்றது.

தூத்துக்குடி திடீரென்று முதன்மை பெறத் தொடங்கிற்று. சீனாவிற்கும், இங்கிலாந்திற்கும் சென்ற பஞ்சு முழுவதும் இங்கிருந்துதான் சென்றது. 1851-க்கும் 1861-க்கும் இடையே தூத்துக்குடிக்கு உள்நாடுகளிலிருந்து சரியான கற்சாலைகள் போடப்பெற்றன. 1876-ல் புகைவண்டியும் வந்துவிட்டது

சென்னையிற் பாதிக்குமேல் இங்கு வணிகம் நடைபெறுகிறது. பஞ்சு, சப்பான், இங்கிலாந்து, செர்மனிக்கும், நூல் சீனாவுக்கும்; நிலவாகை இங்கிலாந்துக்கும் செர்மனிக்கும்; தேயிலை ஐரோப்பா, ஆசுத்திரேலியா, அமெரிக்காவிற்கும்; துணிகள் தென்னாப்பிரிக்கா, இலங்கைக்கும்; காப்பிக்கொட்டை இங்கிலாந்தக்கும்; ஆடு மாடுகள், மிளகாய், சுருள்ளி, அரிசி, தானியங்கள் இலங்கைக்கும் ஏற்றுமதியாகின்றன. துணிகள், தீப்பெட்டி, மண்ணெண்ணெய், சில்லறைச் சாமான்கள் இவை இறக்குமதியாகின்றன. இதனால் சென்னை மாகாணத்தில் இது இரண்டாவது துறைமுகமாகவும் இந்தியாவில் ஐந்தாவது துறைமுகமாகவும் மதிக்கப் பெற்று வருகிறது.

இலங்கைக்குப் போகும் கூலியாட்கள் பத்து மைல் தூரத்திற்கு மேற்கேயுள்ள தட்டப்பாறையில் மருத்துவக் கண்காணிப்பில் சில நாட்கள் தங்கியிருந்து கப்பலிற் போகின்றனர். கப்பல்துறைப் பாலம் 1895ல் போடப்பெற்றது. 1899ல் புகைவண்டி, துறைமுக மேடைக்கே வந்துவிட்டது. நகருக்குத் தெற்கிலிருந்து தொடர்பான மூன்று தீவுகள் புன்னையடி, உரோஞ்சி, பாண்டியன் (முயல்) தீவு என்பன வடகிழக்குச் சாயலாக கடலுள் நீண்டு போகின்றன. முயல்தீவுக்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில் தூத்துக்குடியைப் பார்த்து வடமேற்கு விரிந்திருக்கும் பாறைத் திரடென்று உளது இந்த வளைந்துள்ள தீவுத் தொடரின் உள்ளேதான் துறைமுகம் இருக்கிறது. இதில் கரையை அடுத்துவரும் சிறு மரக்கலங்கள் எட்டு.

ஒன்பதடி ஆழத்தில் காவலுடன் இருக்கின்றன. கடலோடும் பெரிய கப்பல்கள் நகரிலிருந்து ஐந்தாவது மைலுக்கப்பால் முயல்தீவுக்கு வெளியேயுள்ள துறையில் தங்குகின்றன. புன்னையடித்தீவும், உரோஞ்சித் தீவும் எப்போதும் ஒன்றும் சேர்ந்துள்ளன.

புன்னையடித் தீவிற்கும், கரைக்கும் இடையேயிருந்து பதினறடி ஆழமுள்ள இடை தூர்க்கப்பட்டதிலிருந்து அவை பெருந்தடியோடு இணைக்கப்பட்டன. ஐரோப்பாவுக்குப் போகும் பெரிய கப்பலெல்லாம் இங்கு வந்தே போகின்றன ஆங்கில இந்தியப் புகைக் கப்பற் கம்பெனியார் கப்பல்கள் இலங்கைக்குச் சென்று வருகின்றன. இங்கேதான் தேசாபிமானச் செல்வர் திருவாளர் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் நன்முயற்சியால் சுதேசிக் கப்பல் கம்பெனி (*The Swadeshi Steam Navigation Company*) ஒன்று நிறுவப்பட்டு அதன் கப்பல்கள் சில காலம் இலங்கைக்குப் போய் வந்தன. இங்கே பன்னிரண்டு ஆண்டுகளுக்கொருமுறை முத்துச்சலாபம் நடைபெறுகின்றது. அருமையான முத்துக்கள் இப்பக்கத்தில் விளைகின்றன. தூத்துக்குடியிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள தொள்ளாயிரம் பாறையும், புன்னைக்காயலிலிருந்து ஆறு மைல் தூரத்தில் கிழக்கேயுள்ள கூடுமுத்துப் பாறையும் நல்ல முத்துக்கள் விளைவுள்ளனவாகத் தீர்மானிக்கப்பெற்றுள்ளன.

## ஊர் வரலாறு -

பண்டைக் காலத்தில் தூத்துக்குடி பரவர்கள் வாழ்ந்து வந்த மிகச் சிறிய பட்டியாக இருந்தது. போர்த்துக்கீசியர்கள் இந்தியாவில் வந்து குடியேறி இருந்தார்கள். அவர்களுக்குக் கிழக்குக் கரையில் தலைநகராக இருந்தது புன்னைக்காயல். அதனை விட்டுவிட்டு தூத்துக்குடிக்கு வந்துவிட்டார்களென்றால் அதில் எத்தனை வசதி கண்டு அவர்கள் வந்திருக்க வேண்டும்? மகமதியர்

களாலே கொடுமைப் படுத்தப்பட்ட பரவர்களைப் பாது காப்பதற்காகக் கொச்சியிலிருந்து புறப்பட்டு வந்த போர்த்துக்கீசியருடைய படகுகள் 1532-ல் முதன் முத லாகத் தூத்துக்குடிக் கரைக்கு வந்து சேர்ந்தன.

பரவர்கள் கிருத்தவர்களாக மாற்றப் பெற்றனர். அதனால் போர்த்துக்கீசியருடைய செல்வாக்கு நிலை பெற்றது. 1543-க்குள் போர்த்துக்கீசியர் கவர்னர் ஒருவர் தூத்துக்குடியில் இருந்தார். அர்ச்சவேரி யார் என்ற பெரியார் 1544-ல் எழுதிய கடிதம், விசய நகரம் மன்னருடைய ஆட்களும் மதுரையிலிருந்த அவர் களுடைய சிற்றரசராகிய நாயக்கரும், தூத்துக்குடியைத் தாக்கிய விவரத்தைத் தெரிவிக்கிறது. கவர்னருடைய கப்பல் எரிக்கப்பட்டது; வீடுகள் அழிக்கப்பட்டன; அவர் தீவுகளில் ஓடி ஒளிந்தார். போர்த்துக்கீசியர் இருந்ததற்கு அடையாளமாக ஒரு கல்லறைக்கல் இருக்கிறது. அதில் 1,618 திசம்பர் மாதம் உ.யிட்ட தமிழ் கல்வெட்டு உளது. ஓர் ஐரோப்பியரைப் பற்றிய தமிழ்க் கல்வெட்டு இதுதான் முதலாவது. இது கிருத்துவர் கோவிலில் வைக்கப்பெற்றுள்ளது.

1602ல் முதல் முதலாகத் தச்சுக்காரர்கள் இலங் கையில் வந்து சேர்ந்தனர். அவர்கள் 17ம் நூற்றாண்டின் முதற் பகுதியில் அடிக்கடி போர்த்துக்கீசியருடன் போர் தொடுத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் 1658-ல் ஒரு கடற்படையோடு தூத்துக்குடித் துறைமுகத்துள் நுழைந்து அதனைக் கைப்பற்றினர். 1784 வரை அவ் வூர் அவர்களிடம் இருந்து வந்தது அவர்களுக்குச் சொந்தமான ஊர்கள் இந்த மாவட்டத்தில் வேம்பாறு, வைப்பாறு, புன்னைக்காயல், பழையகாயல், காயற்பட்டி னம், மணற்பாடு, ஆழ்வார் திருநகரி என்பன. இப் பகுதிக்குத் தலைநகராகிய தூத்துக்குடியில் அவர்கள்

ஒரு சிறு கோட்டை கட்டினார்கள் அது முந்நூறு அடிச் சதுரமானது அவர்கள் பரவர்களோடு நட்புகொண்டு மீண்டும் முத்துப் பண்ணைகளைக் கைப்பற்றி, பாம்பனி லிருந்து கன்னியாகுமரி வரை கடற்படை அமைத்திருந் தார்கள்.

1700-ல் மார்ட்டின் பாதிரியார் பின்வருமாறு எழுதுகிறார்;—'முழு உரிமை உடையவராக இல்லா திருந்தும் தச்சுக்காரர் தூத்துக்குடியிலிருந்து ஏராளமான வருவாய் பெற்றார்கள்.'' துணி வணிகத்தில் முதன்மை பெற்று அவர்கள் நாளடைவில் அப்பக்கம் வரும் கப்பல் களில் துணிக்குச் சுங்கம் வாங்கத் தலைப்பட்டார்கள். உள்நாட்டில் பல ஊர்களில் அவர்களுக்குத் துணி நெய்து தந்த தொழிலாளர் பலர் இருந்தனர். 1760-ல் ஒரு பெரிய தச்சுப்படை தூத்துக்குடியிலும், மணற்பாட் டிலும் வந்து இறங்கிற்று. மகமது யூசுபு என்ற மகமதி யப் படைத்தலைவர் அது கண்டு சினம் கொண்டு படை யுடன் ஆழ்வார்திருநகரியை நோக்கிச் சென்றார். அப் படைகள் உடன் அவ்வூரை விட்டுப்போய்விட்டன. பாளையங்கோட்டையிலிருந்த ஆங்கிலேயர் படைத் தலைவர் தூத்துக்குடியைப் பிடித்துக்கொண்டார். 1783-ல் சமாதானம் ஏற்பட அதன் பலனாக 1785-ல் தூத்துக்குடி மறுபடி தச்சுக்காரரிடம் போயிற்று. 1792-ல் சென்னை அரசாங்கத்தார் நெல்லை மாவட்டத்தின் ஆளுகையை மேற்கொண்டவுடன் தூத்துக்குடியையும். பிற தச்சுக்காரர் இடங்களையும் தச்சுக்காரரிடமிருந்து ஆங்கிலேயர் கைப்பற்றிக்கொண்டனர். 1818 வரை தூத்துக்குடி ஆங்கிலரிடம்தான் இருந்தது. 1801-ல் தச்சுக்காரருடைய தூண்டுதலால் பாஞ்சாலங்குறிச்சியார் தூத்துக்குடியைப் பிடித்து அங்கிருந்த ஆங்கிலேயரைத் துன்புறுத்தினார்கள். ஆனால் ஆங்கிலேயர்கள் விரை வில் அதனை மீட்டுவிட்டனர். தச்சுக்கோட்டை

பாழாகி வௌவால்கள் வாழுமிடமாக இருந்து 1810-ல் தரை மட்டமாக்கப்பட்டது.

1818-ல் ஐரோப்பாவில் ஏற்பட்ட சில மாறுதல்களின் பயனாகத் தூத்துக்குடி, புன்னைக்காயல், காயற்பட்டிணம், ஆழ்வார்திருநகரி, பாண்டித்தீவு, குரோஞ்சித்தீவு இவை தச்சுக்காரரிடம் 1818 மே மீ 11உ கொடுக்கப்பட்டன. முயல்தீவு எனப்படும் பாண்டித்தீவில் தச்சுக்காரர் கப்பல்களுக்காக ஒரு விளக்குத்தூண் நிறுத்தியிருந்தனர். அவர்கள் அமைத்திருந்த சிறைச்சாலை போன்ற அடையாளங்கள் குரோஞ்சித் தீவில் இப்போதும் காணப்படுகின்றன. அப்போது வந்த உரிமை ஆராய்ச்சிக் கழகத்தினர் தச்சுக்காரர்களுக்கு அவர்களுடைய கோட்டை இருந்த இடம் மட்டுமே சொந்தம் எனவும் அவர்களுக்கு உப்பளங்களில் உரிமை இல்லை என்றும், ஒரு வகைச் சிவப்புச்சாயம் இறக்கக்கூடிய சாயவேர் என்ற செடிகளைச் சேகரிப்பதை ஏலம் விடும் முறைமை அவர்களுக்குக் கிடையாது என்றும் முடிவு செய்தனர்.

அப்போது தூத்துக்குடியென்பது பரவர்கள் குடியிருக்கும் இடமும், ஆங்கிலேயர் கோவிலுக்கு வடபுறமுள்ள கீழூருமே ஆகும். 1819-ல் தச்சுக்காரர்கள் பரவர்களுடைய தலைவரைக் கைக்குள்ளே போட்டுக்கொண்டு மீன் பண்ணைகளைக் கைப்பற்றித் தொல்லை விளைவித்தனர். புன்னைக்காயலிலிருந்த ஆங்கில அதிகாரி மாவட்ட ஆட்சித் தலைவருக்கு எழுதிய கடிதத்திலிருந்து சாதித் தலைவர்கள் நாவிதர்களை ஆங்கிலேயருக்குச் சவரம் செய்வதைக் கூடாதெனக் கட்டுப்படுத்தி இடையூறு செய்தார்கள் என்பது தெரிகிறது. கடைசியாக எல்லாத் தொல்லைகளும் நீங்கி 1825 ஜூன் மீ 1உ யன்று தூத்துக்குடி ஆங்கிலேயருடைய முழு ஆளுகையில் வந்து சேர்ந்தது பின் ஓட்டப்

பிடாரத்தில் பிறந்து தூத்துக்குடியில் சிறக்க வாழ்ந்திருந்த வீரர், பெருங்கவி வ. உ. சிதம்பரம் பிள்ளை போன்ற மெய்வீரர்கள் உழைப்பினாலும், காந்தியடிகளுடைய பெரிய தியாகத்தினாலும் இந்தியத்தாய் 15—8—1947ல் விடுதலை பெற்றுத் தன்னாட்சியடைந்தாள்.

## தூத்துக்குடி - சங்கரராமேஸ்வரர்:-

இங்ஙனமாக வளர்ந்த பெருந் திருநகர் தூத்துக்குடி; இது திருமந்திரநகர் எனவும் பெயர் பெறும். மேலூரின் நடுவே மிகவும் அழகாக விளங்குகின்றது சங்கர இராமேஸ்வரர் திருக்கோவில் அம்மை பாகம்பிரியாள்; ஆனதால் அவருடைய திருக்கோவிலிலேயே தெற்கே பார்க்க எழுந்தருளியிருந்து கொண்டு பெருமானை வழிபடவரும் அடியார்களுக்கு வேண்டும் வரங்களெல் லாம் அருளுகின்றாள். மெய்கண்டதேவர், அருணந்தி சிவம், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம் ஆகிய சைவ சமைய சந்தானாசிரியர்கள் நால்வரும் அறுபத்து மூவரு டன் காட்சி அருளுகின்றனர். இவர்கள் இந்தக்கோவி லில் இடம் பெற்றிருப்பது இவ்வூரார் செய்த தவமே.

இங்கே பெருந் திருவிழா சித்திரை மாதத்தில் நடைபெறுகின்றது. இராமபிரானாற் பூசிக்கப் பெற்ற சங்கரர் இவர்; ஆதலால் சங்கரஇராமேஸ்வரர் என்ற திருப்பெயர் பெற்றார்.

இதுகாறும் சீவைகுண்டச் சிவன் கோவில்கள் கண்டு கும்பிடப் பெற்றன. இனி, தண் பொருந்தம் திருச்செந்தூர் வட்டத்திற் புகுகின்றதாகையால் அதன் தென்கரை வழியே சென்று ஆங்காங்குள்ள திருக் கோவில்தனை வணங்கித் திருவருளைப் பெறுவோம்.

